5/-

# விடுதலைப் போரில்...





தாய் நாட்டின் விடுதலைப் போரில் தங்கள் நல்லுயிரைத்
தூக்கு மேடையில் பலி கொடுத்த வீரத்தியாகிகள்
சர்தார் பகத்சிங், சுகதேவ், ராஜகுரு.

# முன்னுரை

இன்றைக்கு சுமார் 30 ஆண்டுகளுக்கு முன்னுல் இந்த நாட்டின் நிலைமை என்ன? மக்கள் நிலை என்ன? நம் மக்கள் அந்நியராகிய வெள்ளையர் ஆட்சியில் அடிமைப்பட்டுக் கிடந்தனர். அச்சமும், பேடிமையும், அடிமைச் சிறுமதியும், உச்சத்தில் கொண்டவர்களாக ஊமைச் சனங்களாக வாழ்ந்தனர்.

"கஞ்சி குடிப்பதற்கில்லார்; அதன் காரணங்கள் இவை என்று அறிவுமில்லார்; பஞ்சமோ, பஞ்ச மென்றே தினம் பரதவித்தே உயிர் துடிதுடித்துத் துஞ்சி மடிந்தனர்; தன்னம்பிக்கையை இழந்து சோர்ந்து கிடந்தனர்.

இந்த மக்களைப் பார்த்துத் தூங்காதே! எழுந்திரு! சுடர்முகம் காட்டு; ஆக்கப் பணிசெய்; ஜெயமுண்டு; பயமில்லை; இந்த ஜென்மத்திலே விடுதலை உண்டு; நிலை உண்டு என்று அறைகூவி மக்களைத் தட்டி எழுப்பியது ஒரு மாபெரும் இயக்கம்.

இந்த இயக்கத்திலே பல்லாயிரம் நல்லோரும், சான்றேரும் தங்களையே அர்ப்பணித்துக் கொண்டு அந்நிய ஆட்சியை எதிர்த்து, நீண்ட நெடுங்காலம் போராடினார்கள்; மகத்தான தியாகங்கள் செய்தனர். அதன் காரணமாக இந்த தேசம் விடுதலை அடைந்தது. அந்நிய ஆட்சிக் காலத்தில் 100க்கு 98 பேர் இந்த நாட்டில் தற்குறிகளாக இருந்தனர். இன்றைக்கு 100க்கு 50 பேர் படித்தவர்கள்; அந்நியர் ஆட்சி காலத்தில் பாமரராய், விலங்குகளாய் வாழ்ந்த மக்களைப் பண்டிதர்களாக ஆக்கியுள்ளது சுதந்திரம். அந்

நியர் ஆட்சியில் மக்கள் வாழ்வு சராசரி 20 வயதுதான். இன்றைக்கு மக்கள் வாழ்வு சராசரி 50 வயதாக உயர்ந்திருக்கிறது. காலமெல்லாம் உழைத்தாலும் உருப்படியாக 10 அணுச் சேர்த்து வருடம் ஒருமுறை ஒரு வேட்டி வாங்கிக் கட்டிக்கொள்ளக்கூட முடியாமல் கோடிக்கணக்கான விவசாய மக்கள் அந்நியர் ஆட்சியில் வறுமையில் வாடினர். இன்றைக்கு அந்த நிலை ஒழிக்கப்பட்டு விட்டது. மேழி பிடித்தவரை மேதையராக்கியுள்ளது இந்த நாட்டின் சுதந்திரம். அந்நியர் ஆட்சியில் பாலைவனங்களாக இருந்தவைகள் எல்லாம் இன்றைக்கு சோலை வனங்களாக்கப்பட்டிருக்கின்றன. அந்நியர் ஆட்சியில் பிரபுக்களுக்கும், பெரிய தனக்காரர்களுக்கும், பொழுது போக்குக்காக, அடிமையாக அடைக்கலம் புகுந்திருந்த கலையும், கலைஞர்களும் அவர்களுக்குக் கட்டியங்கூறி, அவர்களைப் புகழ்ந்து வயிறு வளர்த்த நிலையை இன்றைக்கு மாற்றிவிட்டது இந்த நாட்டின் சுதந்திரம். கலையின் பேரால் தையலர் தம்மிடமிருந்து தூது சென்று பிழைத்தவர்கள் எல்லாம் இன்றைக்கு கலைஞர்களாகவும், அறிஞர்களாகவும், உயர்ந்துள்ளார்கள். இந்த நிலைகளெல்லாம் எப்படி வந்தது, யார் காரணம், என்பதைப் பற்றி இன்றைய மக்களுக்குத் தெரியவில்லை; தெரியப்படுத்தவுமில்லை. இது, வேதனைக்குரிய நிலைமை. ஆகவே, வாய்ப்புக் கிடைக்கும் போதெல்லாம், இந்த நாடு சுதந்திரம் அடைவதற்கு முன்னால் இருந்த நிலைமைகளையும், சுதந்திரப் போராட்டத்தின் பெருமைகளையும், சுதந்திரப் போராட்ட வீரர்களின் தியாகத்தையும் பற்றி மக்கள் மனத்திலே பதிய வைக்க வேண்டும். இது இன்றைக்கு தேசத்தின்

நன்மைக்காக அவசர அவசியமாக உள்ளது. எனவே நான், இந்தச் சிறு புத்தகத்தில் சுதந்திரப் போராட்டத்தைப் பற்றியும், அதில் ஈடுபட்ட சிலரைப் பற்றியும் சில குறிப்புகளை முன் பகுதியில் எழுதியுள்ளேன்.

இரண்டாவது பகுதியில் தமிழ்நாடு காங்கிரஸ் அரசியல் தியாகிகள் சங்கம் கடந்த 10 வருடங்களாகச் செய்த காரியங்களைத் தொகுத்து எழுதியுள்ளேன். இது சங்கம் சம்பந்தப்பட்டது என்ருலும் இதில் எல்லோரும் தெரிந்துகொள்ள வேண்டிய பல செய்திகள் உள்ளன. இதில் ஏதாவது தவறு இருந்தால் தள்ளிவிட்டு நல்லவைகளை எடுத்துக்கொள்ளுமாறு கேட்டுக் கொள்கிறேன். இந்தப் புத்தகம் வெளியிட உதவியாக இருந்த நண்பர்களுக்கு எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

தங்கள்

**கே. கன்னையா**

**காரைக்குடி.**

## விடுதலைப் போரே எங்களை பெரிய மனிதன் ஆக்கியது

### பண்டித நேருஜி சொல்லும் ரகசியம்

(24—5—68 நவசக்தி செய்தி) பஞ்சிம், மே 22 தாம் ஈடுபட்ட இந்திய விடுதலைப் போராட்டம்தான், தம்மை ஒரு பெரிய மனிதனாக உருவாக்கியது என்று பிரதமர் நேருஜி இன்று இங்கு கூறினார். இங்கு நடைபெற்ற பொதுக்கூட்டம் ஒன்றில், ஆரம்பத்தில் நேருஜியைப் பலரும் பாராட்டிப் பேசினார்கள். அதற்குப் பதில் அளித்துப் பேசுகையிலேயே அவர் மேற்கண்டவாறு கூறினார்.

இந்திய விடுதலைப் போரில் நான் ஈடுபட்டிராவிட்டால் ஒரு வேளை நான் ஒரு உதவாக்கரையாகப் போயிருக்கக்கூடும். அல்லது வெற்றிகரமான ஒரு வக்கீலாக இருந்திருக்கக்கூடும். "ஆனால், விடுதலைப் போராட்டத்தில் ஈடுபட்டவன் என்பதனால்தான் மக்களால் மதிக்கப்படும் அளவுக்கு உயர்ந்தேன். நான் மட்டுமல்ல, என்னைப்போலவே சுதந்திரப் போரில் ஈடுபட்ட மற்றும் பலரும் மக்கள் நன்மதிப்பைப் பெற்றார்கள். மகத்தான லட்சியத்துக்குத் தன்னை அர்ப்பணித்துக் கொள்வதன் மூலமே ஒருவன்பெரிய மனிதனாகிறான் என்று சுட்டிக்காட்டிய நேருஜி, மக்கள் தங்களை உன்னதமான லட்சியங்களுக்கு அர்ப்பணித்துக் கொள்ளவேண்டும் என்று வேண்டுகோள் விடுத்தார்.

# விடுதலைப் போரில்..

இந்திய நாட்டின் விடுதலைக்காகக் காங்கிரஸ் மகாசபை 1885ல் தோன்றி, ஸ்தாபன ரீதியாகப் போராட ஆரம்பித்தது என்றாலும் மகாத்மா காந்திஜி காங்கிரஸ் தலைமைப் பதவியை ஏற்றுக்கொண்ட பிறகு தான் சுதந்திரப் போராட்ட வேகம் சூடு பிடித்து, இந்தியப் பொதுமக்களின் மனோபாவத்தைப் பிரதிபலிக்கும் உண்மையான போராட்டமாக மாறியது. காந்திஜி 1980ல் ஆரம்பித்த உப்புச் சத்தியாக்கிரக இயக்கம் சரித்திர முக்கியத்துவம் வாய்ந்தது. எனினும், 1982ல் ஆரம்பித்த அன்னியத்துணி பகிஷ்கார இயக்கம் சீமைத்துணிக்கடைகளில் நடத்திய மறியல் ஆங்கில ஏகாதிபத்தியத்தை ஆட்டி அசைக்க ஆரம்பித்தது.

முதல் வட்டமேஜை மகாநாட்டில் நமக்குக் கிடைத்த மறியல் செய்யும் உரிமையைப் பயன்படுத்திக் கொண்டு, காங்கிரஸ் இந்தியா முழுவதும் ஒரு மகத்தான மறியல் இயக்கத்தை நடத்தியது, அப்படி நடந்த சீமைத்துணிக்கடை மறியல்களில் காரைக்குடியில் நடந்த மறியல்தான் முதன்மை வகித்தது என்று சொல்லவேண்டும். அன்றைக்கு இந்தியாவில் ஆங்கில மோஸ்தரில் சீமான்கள் மூழ்கியிருந்த பகுதிகளை, பாம்பே, கல்கத்தா, சென்னை என்று சொன்னாலும், காட்டுக்கோட்டை நகரத்தார்கள் வாழும் பகுதியான செட்டி நாட்டின் 96 வட்டகைகளிலும் வாழும் நகரத்தார்களிடையே அன்னிய, நடை, உடை, மோகம் அதிகமாகக் காணப்பட்டது. அதற்குக் காரணம், செட்டியார்

கள் பெரும்பாலும், அயல் நாடுகளிலே தங்கள் வியாபாரம், தொழில் முதலியவற்றை வைத்திருந்தார்கள். அவர்கள் பெரும்பாலும், மேடின் இங்லண்டு என்று பொறிக்கப்பட்ட சாமான்கள் மீதும், துணிகள் மீதும் அதிக மோகங் காட்டினார்கள். செட்டியார்கள் பாப்ளீன் என்று இவர்களுக்காக விசேசமாகத் தயாரிக்கப்பட்ட பாப்ளீன்கள், சட்டைத் துணிகள் இங்கிலாந்திலிருந்து வரும். இவர்கள் கட்டும் வேட்டியோ, 9000 கிளாஸ்கோ மல்தான். இப்படிப்பட்ட நாட்டுக் கோட்டை செட்டியார்களுக்கு, செட்டிநாட்டிற்கு நடு நாயகமாக விளங்கியது காரைக்குடி. இங்கே இந்த மாவட்டத்திலேயே முதன்மையான ஜவுளிக்கடைகள் இருந்தன. அதிகமாகத் துணி வியாபாரம் நடக்கும் நகரம், இந்த சூழ்நிலையில் இங்கே சீமைத்துணிக்கடை மறியலை ஆரம்பிப்பது என்று மாவட்டக் காங்கிரஸ் கமிட்டித் தலைவர் திரு. பொ. திருகூடசுந்தரம் பிள்ளை முடிவு செய்தார். தொண்டர்கள் சேர்க்கப்பட்டார்கள். தேசபக்தியால் தூண்டப்பட்ட பல இளைஞர்கள் முன்னுக்கு வந்தார்கள். போராட்டம் நடத்த இந்தத் தொண்டர்களுக்கு உணவு, உடை, ஜாகை, காங்கிரசே கொடுப்பது என்று முடிவு செய்யப்பட்டது, கமிட்டியில் பணம் உண்டா? இல்லை. நாள்தோறும் நகரத்தில் பொதுக் கூட்டம் காங்கிரஸ் நடத்தும். பொதுக் கூட்டங்களுக்கு நோட்டீஸ் அச்சடிக்க முடியாது. தமுக்கு அடிப்பதற்கு ஆள் வரமாட்டான் பயத்தால். ஆகவே காங்கிரஸ் கமிட்டிக்கு இரண்டு தமுக்கு வாங்கப்பட்டது. கூட்டம் என்றால் தொண்டர் கே. கன்னையா, அப்துல்லா ராவுத்தர் இருவரும் கழுத்திலே தமுக்கை மாட்டிக்கொண்டு நகரெங்கும்

அடித்து முழக்குவார். திரு. பொ. திருகூடசுந்தரம் பிள்ளை பேசுகிறாரென்று அறிவிப்புக் கிடைத்தவுடன் காந்தி சதுக்கத்தில் மக்கள் கூட்டம் திரளாகக் குழுமி யிருக்கும். கூட்டத்திற்கு மேடை இருக்காது, விளக்கு இருக்காது, ஒலிபெருக்கி இருக்காது. நகரசபை விளக்கின் உதவியால் கூட்டம் நடத்தப்படும். திருகூட சுந்தரம்பிள்ளை பேசுவார். பேசிக்கொண்டிருக்கும் பொழுதே பலர் தாங்களணிந்துள்ள ஜரிகைத் துப்பட்டாக்களையும், சிலுக்குச் சட்டைகளையும் கழற்றித் தீயிலிடுவார்கள். அந்த அளவிற்கு தேசபக்தியைக் கேட்போர் உள்ளத்திலே உருவாக்கி விடுவார். உடனே கதர்க் கடைக்குப் போய் கதர் வாங்குவார்கள். காங்கிரஸ் உண்டியலிலே பணம் போடுவார்கள்.

## சீமைத்துணி கடை மறியல்

சீமைத்துணி மறியல் ஆரம்பமாயிற்று. தொண்டர்கள் இரண்டு பிரிவினராக மறியல் செய்வார்கள். காலையில் கடை திறந்தவுடன் மறியல் ஆரம்பமாகும். பகல் உணவிற்கு இந்தப் பிரிவு புறப்பட்டவுடன், அடுத்த பிரிவினர் வந்துவிடுவார்கள். இப்படிப்பட்ட அமைதியான, சாத்மீகமான மறியல்களின் பயனாய், மூன்று மாத காலத்திற்குள் இலட்சக் கணக்கான ரூபாய் மதிப்புள்ள சரக்குகள் தேங்கிவிட்டன. சீமைத்துணி வியாபாரமே சீர்கெட்டுப் போய்விட்டது. காரைக்குடி ஜவுளிக்கடைகாரர்களுக்கு இலண்டன், லங்காஷயரிலிருந்து துணிப் பேல்கள் நேரடியாக வரும். ஆனால் இப்போது ஆர்டர்கள் வரவில்லை. சரக்குகள் ஏற்றுமதியாகவில்லை. இதைக் கேள்வியுற்ற லங்காஷயர் கலங்கினர். இங்கோ ஆத்திரம் கொண்ட

ஜவுளிக்கடை, முதலாளிகள் மறியல் தொண்டர்களை பலவிதத்தில் தொந்தரவு செய்ய ஆரம்பித்தனர். பயனில்லை; மெ. லெ. ரெ. ஜவுளிக்கடை; மைசூர் ஜவுளிக்கடை;ச. பி. ஜவுளிக்கடை இவைகள் பெரிய கடைகள், மூடப்பட்டன. இந்த சீமைத்துணி வாங்கி வந்த மக்களுக்கு வேறு துணிகள் வழங்கியாக வேண்டுமே? கதர் சப்ளை செய்ய முடியவில்லை. அதனால் பல சுதேசி ஜவுளிக் கடைகள் திறக்கப்பட்டன. காரைக்குடியில் நடந்த சீமைத்துணி மறியல் இந்தியாவிலேயே வெற்றிகரமான மறியல், மகத்தான காரியம் என்று பல இந்தியத் தலைவர்கள் புகழ்ந்தார்கள்.

இவ்வளவு மகத்தான போராட்டத்துக்குப் பணம் ஏது? எந்தவிதமான நிதி கையிருப்புமின்றி 50 நிரந்தரத் தொண்டர்கள் சேர்வாகி, சாப்பாடு (நெய், அப்பலத்துடன் ) உடைகள் வேறு கொடுத்தாக வேண்டுமே, வழி என்ன? மக்களை நம்பித் திட்டமிடப்பட்டது. மறியல் ஆரம்பிப்பதற்கு முன் காலை 6 மணி முதல் 8 மணி வரை, தொண்டர்கள் பஜனை பாடிக் கொண்டு தினம், ஒரு வீதி அரிசி வசூலிப்பார்கள். இந்தத் தொண்டர்களின் பஜனையைக் கண்டவுடனேயே மக்கள், ஆனந்தமாக அன்போடும் போட்டி போட்டுக் கொண்டு அரிசியை கொண்டு வந்து கொட்டுவார்கள். தினசரி ½ மூட்டை, ஒரு மூட்டை அரிசி வசூலாகிவிடும். நெய்க்கடைக்காரர் நெய் கொண்டு வந்து கொடுப்பார். விறகுக் கடைக்காரர் விறகு கொடுப்பார். வாரம் ஒரு நாள், தொண்டர்கள் சந்தைக்குப் போவார்கள். காய்கறிகளும், இலையும், தேங்காயும், இரண்டு கை வண்டி நிரம்ப ஏற்றிக் கொண்டு வருவார்கள். அவ்

வளவும் காய்கறி வியாபாரிகள் உற்சாகத்துடன் அன்பளிப்பாகக் கொடுப்பார்கள். இந்த மறியல் போராட்டம் வெற்றிகரமாக முடிவதற்கு முக்கிய பங்கு கொண்டவர்கள், தொண்டர்படைத் தலைவர், கோ. பாண்டியன், கும்பலிங்கம் பிள்ளை. தீவிரமான தொண்டர்கள் என். எஸ். கணபதி, கே. கன்னையா, பி. சுந்தரேசன், சித. மாரியப்பா, பி. உன்னிகிருஷ்ணன், டி. நடராஜன் இவர்களது சேவை மகத்தானது.

## 2-வது வட்டமேஜை மகாநாடு முறிந்தது

முன்னே கிடைத்திருந்த சட்டபூர்வமான மறியல் செய்யும் உரிமை 2-வது வட்ட மேஜை மகாநாட்டின் முறிவால் பறிபோனது. காந்திஜி, லண்டனிலிருந்து கப்பலில் வந்துகொண்டிருக்கும் போதே, இந்தியாவில் பண்டித ஜவஹர்லால் நேரு கைது செய்யப்பட்டார். நாடெங்கும் மறுபடி சட்ட மறுப்பு ஆரம்பமானது. காரைக்குடியிலும் போராட்டம் ஆரம்பமானது. நாட்டுக்கோட்டைச் செட்டியார்களிலேயே முதன் முதல் சட்டத்தை மீறியவர், தமிழறிஞர் ராய. சொக்கலிங்கம் செட்டியார். சிவகெங்கையில் கைது ஆகி ஒரு வருடம் கடுங்காவல் தண்டனை பெற்றார். காரைக்குடி காந்தி சதுக்கத்தில் 144 தடை உத்தரவை மீறி கோ. பாண்டியன் ப. ஜீவானந்தம், கும்பலிங்கம்பிள்ளை ஆகியோர் கைது ஆனார்கள்.

**ரத்தம் சிந்திய வீரன்:** அன்றே சட்டத்தை மீறி என். எஸ். கணபதி காந்தி சதுக்கத்தில் பேசவந்தார். போலீஸ் சர்க்கிள் இன்ஸ்பெக்டர் கோபாலகிருஷ்ணன், தம் படையுடன் வந்து, என். எஸ்

கணபதியைப் பார்த்து நீ உடனே இந்த இடத்தை விட்டுப் போய்விடு என்று எச்சரித்தார். அதற்கு என். எஸ். கணபதி, என்னைக் கைது செய்தாலன்றி, நானுக இந்த இடத்தை விட்டுப் போக மாட்டேன் என்ருர். சர்க்கிள் இன்ஸ்பெக்டர் கணபதியைத் தடியால் அடித்துக் கீழே தள்ளினுர். அப்போதும் கணபதி அசையவில்லை. கீழே கிடந்த கணபதி நெஞ்சின்மீது அந்தக் கொடியோன், தனது பூட்சுக்காலால் பல தடவை ஓங்கி மிதித்தான். கணபதி வாயிலிருந்து ரத்தம் பெருக்கெடுக்கக் கக்கினுர். தேசீயக் கொடி மரத்தின்னை பூராவும் ரத்த வெள்ளம், அதன் பின் கணபதியை போலீஸ் லாரியில் தூக்கிப் போட்டுக் கொண்டு போனுர்கள். கோ. பாண்டியன், ப. ஜீவானந்தம், கும்பலிங்கம், என். எஸ். கணபதி ஆகியோர்கள் 6 மாதம் தண்டிக்கப்பட்டார்கள். **தொண்டர்களை புளியவிளாரால்** அடித்து வதைத்தார்கள். 1938ல் சட்டத்தை மீறி வி. பரமசிவம், ஆர். ராமநாதன், பி. உன்னிகிருஷ்ணன், கே. கன்னையா, ராமசாமி, பட்சி ராசன் ஆகியோர், தேசீயக்கொடியுடன் மேல ஊரணிக் கரையிலிருந்து ஊர்வலம் புறப்பட்டு, முக்கிய வீதிகள் வழியாக, சிவன் கோவில் வளைவு திரும்பும் போது, ஒரு பஸ் நிறைய போலீஸ் வந்து, தொண்டர்களை வளைத்துக்கொண்டு பஸ்ஸின் டாப்பில் கட்டுக் கட்டாகக் கொண்டு வந்த புளிய விளாரால் தொண்டர்களை மாறி மாறி அடித்தார்கள். தொண்டர்கள் அப்படியே உட்கார்ந்து அவ்வளவு அடியையும் வாங்குகிருர்கள். உடம்பெல்லாம் தடிப்பு, ரத்தம் பீறிட்டு ஓடுகிறது. இவ்வளவு சித்திரவதையையும் தாங்கிக் கொள்ளத் தொண்டர்கள், வந்தே மாதரம்,

மகாத்மா காந்திக்கு ஜே! என்ற மந்திரத்தையே சொன்னுர்கள். போலீஸார் புளியவிளார் கட்டுகள் அத்தனையும் தீரும் வரை அடித்தார்கள். பின்பு தொண்டர்களை பஸ்ஸில் ஏற்றிக் கைது செய்தார்கள். கண்ணைக்கட்டி காட்டில் விட்டார்கள்.

1933ம் சட்டத்தை மீறி பி. உன்னிகிருஷ்ணன், கே. கன்னையா, இருவரும் மறியல் செய்தார்கள். இவர்களை போலீஸார் கைது செய்து போலீஸ் ஸ்டேசனில் வைத்திருந்து மறுநாள் காரில் ஏற்றிக் கொண்டுபோய் கண்ணைக் கட்டி காட்டில் விட்டு வந்தார்கள்.

## சுவரில் எழுதியதற்குச் சித்திரவதை

1935 பி. டி. ராஜன் மந்திரியாக இருந்த சமயம் காரைக்குடிக்கு வருகிறுர். அவர் வருகையை எதிர்த்து ஒருநாள் சுவரில் டி. நடராஜனும், கே. கன்னையாவும் சுமார் இரவு 1மணிக்கு பி. டி. ராஜனே திரும்பிப் போ என்று சுவரில் எழுதுகிறுர்கள். அந்தச்சமயம் போலீஸ் சி. ஐ. டி. இரண்டு பேர்கள் வந்து இவர்களைப் பிடித்துக் கொண்டார்கள். மெ. மெ. வீதியிலிருந்து போலீஸ் ஸ்டேசன் போகும் வரை அடித்தார்கள். இரவு பூராவும் பட்டினி போட்டு அடைத்து வைத்திருந்து காலையில் திறந்து விட்டார்கள்.

## கவர்னர் அலங்காரக் கொட்டகை தீப்பிடித்த மாயம்.

அந்தக் காலத்தில் பிரிட்டிஷ், வெள்ளைக்காரக் கவர்னர்கள் எந்த நகரத்துக்குச் சென்றுலும், அந்த

நகரத்தில் உள்ள தேச பக்தர்களை (காங்கிரஸ்) இரண்டு நாள் முன்னடியே கைது செய்து அடைத்து விடுவார்கள். அதே போல் காரைக்குடிக்கு கவர்னர் வருகிறார், அவரை வரவேற்க, வெள்ளைக்கார தாசர்கள் கோலாகலமான ஏற்பாடுகள் செய்தார்கள். கவர்னர் வரவேற்புக் கொட்டகை, உயர்ந்த சில்க்கு, வாயில் துணிகளால் அலங்கரிக்கப்பட்டிருந்தது. காங்கிரஸ்காரர்களை கண்ட இடத்தில் கைது செய்கிறார்கள். ஒரு சிலர் எப்படியும் கருப்புக்கொடி பிடிக்கவேண்டும், என்பதற்காகத் தலைமறைவாய்ப் போய்விட்டார்கள். கவர்னர் வருகிறார். சிவன் கோவில் தபாலாபீஸ் முச்சந்தியில் திடீரென்று தோன்றி தி. ம. நடராஜனும், என். கே. லெட்சுமண அய்யரும், கவர்னர்கார் வந்தவுடன் திரும்பிப்போ என்று கருப்புக் கொடியைக் கார் முன் காட்டினார்கள். உடனே போலீஸார் வந்து இருவரையும் அந்த இடத்திலேயே லத்தியால் அடித்துப் போலீஸ் ஸ்டேசனுக்கு இழுத்துச் சென்றார்கள். அங்கு லாக்கப்பில் சித்திரவதை செய்யப்பட்டார்கள். மீனாட்சி சுந்தரேஸ்வரர் உயர் நிலைப்பள்ளிக்கு ஹாஸ்டலை திறந்து வைத்து கவர்னர் வந்து வரவேற்கப்பட்டுப் பேசிக் கொண்டிருக்கிறார். அந்த நேரத்திலேயே பள்ளியின் கதவில் ஓர் எச்சரிக்கை நோட்டீஸ் காணப்பட்டது. இந்தக் கவர்னரின் அலங்காரக் கொட்டகை தீக்கிரையாக்கப்படும் என்று கண்டிருந்தது. அதைப் பார்த்துப் போலீஸாரும் மற்றவர்களும் பரபரப்படைந்து பயந்து கொண்டிருந்தனர். கவர்னர் பேசி முடித்துப் புறப்பட்டார். அதே சமயத்தில் கொட்டகையில் திடீரென்று தீ பிடித்து எரிய ஆரம்பித்தது. அலங்காரச் சாமான்கள் அத்த

ளையும் சாம்பலாகின. இரண்டு நாள் இரவு, பகல், நூற்றுக்கணக்கான போலீஸ் காவல் காத்து நின்றனர். இருந்தும் எச்சரிக்கை, நோட்டீஸில் கண்டபடி கொட்டகை தீ பிடித்து எரிந்தது. போலீஸாருக்கு ஆச்சரியமாகவும், அதிசயமாகவும் இருந்தது. இது சம்பந்தமாக R. H. நாதன் (மாணவர்) கைது செய்யப்பட்டார்.

## 1940 தனிநபர் சத்தியாக்கிரகம்

காரைக்குடியில் செய்தவர்கள், டாக்டர். எஸ். சுப்பிரமணியம், திரு. சா. கணேசன், கே. கன்னையா, டி. நடராஜன், பொ. சீனிவாசன், இந்தியப் பாது காப்புச் சட்டப்படி தண்டனை டாக்டர். எஸ். சுப்பிர மணியத்துக்கு ரூ. 1000 அபராதமும், கோர்ட்டு கலையும் வரை தண்டனை. கே.கன்னையாவிற்கு ஒன்றரை வருடம் கடுங்காவல். சா. கணேசனுக்கு 6 மாத கடுங்காவல், டி. நடராஜனுக்கு 4 மாதம் கடுங்காவல், பொ. சீனிவாசனுக்கு 4 மாதக் கடுங்காவல், யுத்த எதிர்ப்பு பிரச்சாரம் செய்ததற்கு ராம. கருப்பஞ் செட்டியார் பி. உன்னிகிருஷ்ணன் இருவருக்கும் 9 மாதம் தண்டனை.

**1942 - ஆகஸ்ட்டு புரட்சி:** இரவோடு இரவாக 9உ காலை 6 மணிக்குள் இந்தியா பூராவும், முக்கியத் தலைவர்கள் அனைவரும் பாதுகாப்புக் கைதியாக கைது செய்யப்பட்டார்கள். அப்படிக் கைதியானதில் காரைக்குடியில் திரு. ஆறு. ஆராம. சொக்கலிங்கம் செட்டியார்தான். அதன் பின் டாக்டர். எஸ். சுப்பிரமணியம் 10உ கைது செய்யப்பட்டார். 11உ சட்டத்தை மீறி, காந்தி சதுக்கத்தில் பொதுக் கூட்டம் நடைபெறு

மென்றும் சா. கணேசன் பேசுவார் என்றும் அறிவிக்கப்பட்டது. 12உ காலையில் திரு கே. கன்னையா கைது செய்யப்பட்டார். மாலையில் பொதுக் கூட்டம் என்று தெரிந்தவுடன் காந்தி சதுக்கத்தில் பதினாயிரக்கணக்கான மக்கள் கூடிவிட்டார்கள். நோக்குமிடமெல்லாம் ஜன சமுத்திரம் போன்ற காட்சி, போலீஸார் சட்ட விரோதமான கூட்டம், கலைந்து போய்விடுங்கள் என்று எச்சரித்தனர். என்றாலும் கூட்டம் கலையவில்லை. இந்தச் சமயத்தில் போலீஸார் காந்தி சதுக்கத்தின் கம்பத்தில் கட்டியிருந்த தேசீயக் கொடியை கீழே இறக்க முயற்சித்தபோது, T. பழனியாண்டி, கொடிக் கம்பத்தைக் கட்டிப் பிடித்துக் கொண்டு கொடியை இறக்காதீர்கள். தேசீயக் கொடிக்கு ஜே! என்று கோஷமிட்டார். இதனைப் பார்த்த மக்களும், கொடி மரத்தில் கைவைக்காதே என்று கோஷித்தனர். கற்கள் வீர்! வீர்! என்று பறந்தன. ஓர் பயங்கரமான சூழ்நிலை. உடனே போலீஸார் பழனியாண்டியைக் கைது செய்தனர். கூட்டம் போலீஸை நெருங்கியது, போலீஸார் துப்பாக்கியால் சுட ஆரம்பித்தனர். கூட்டம் சிதறி ஓடி நாலா பக்கமும் உள்ள வீதிகளை கல், மரங்கள், பீப்பாய்களைக் கொண்டு அடைத்து போலீஸ் லாரி எந்தப் பக்கமும் போகாமல், நாலா பக்கமும் அடைத்து விட்டனர். இரவு 9-30. வரை போலீஸாரையும், அதிகாரிகளையும் காந்தி சதுக்கத்தில் சிறைவைத்தது போல் செய்து விட்டனர். பொது மக்கள் இந்தச் சமயத்தில் ஸரஸ்வதி சினிமாக் கொட்டகை வாசல் பக்கமிருந்து கற்கள் வீசுவதாக நினைத்துக் கொண்டு ஓர் சார்ஜண்டு, அந்தப் பக்கம் நின்று கொண்டிருந்த கூட்டத்தின் மீது சுட்டான்.

நெல்லியான் என்ற வாலிபன் மீது குண்டுபட்டு அந்த இடத்திலே உயிரை விட்டார். 1942 ஆகஸ்ட் 11உ காரைக்குடியில் பொது மக்களுக்கும், போலீஸாருக்கும் நடந்த போராட்டத்தைப் பிரெஞ்சுப் புரட்சியில் நடந்த தெருச் சண்டை (யுத்தம்) க்கு ஒப்பிடலாம். அவ்வளவு ஆவேசமாகப் போலீஸாரை மக்கள் தெருத் தெரு வாக எதிர்த்து நின்று போராடினார்கள். இவ்வளவு பெரிய போராட்டத்துக்குக் காரணமாக இருந்தார்கள், தூண்டிவிட்டார்கள் என்று குற்றஞ் சாட்டிப் பலரைக் கைது செய்து சப் ஜெயில்களில் அடைத்தார்கள். பல மாதங்கள் சப் ஜெயில்களில் விசாரணையின்றி வைத்துச் சித்திரவதை செய்தார்கள். சா. கணேசனைக் கைது செய்ய வாரண்டு பிறப்பித்தார்கள். தலைமறை வாய்ப் போய்விட்டார். இதையடுத்து சா. கணேசன் சென்னை கோர்ட்டில் ஆஜராகிக்கைது ஆனார். சென்னை யிலிருந்து திருப்பத்தூர் சப் ஜெயிலுக்கு கைகால்களில் விலங்கிட்டுப் போலீஸார் அவரைக் கூட்டி வந்தனர். சப் ஜெயிலில் ஏற்கனவே இருந்த எங்களுடன் வைத் தனர். மறுநாள் வேறு சிறைக்கு மாற்றினார்கள். பிறகு கோர்ட்டில் சா. கணேசனுக்கு 4 வருடம் கடுங்காவல் K. கன்னையாவிற்கு 1 வருடம் கடுங்காவல், குண்டன் வீட்டு பெரிய கருப்பன் அம்பலத்துக்கு 1 வருடம் கடுங்காவல், பூக்கடைக் குண்டன் என்ற சுப்பிர மணியத்துக்கு 1 வருடம் கடுங்காவல். ஓர்க்ஷாப் மணிக்கு 1 வருடம் கடுங்காவல், சுப்பிரமணியத்துக்கு 1 வருடம், T. பழனியாண்டிக்கு 4 வருடம் கடுங்காவல் S. S. வாசனைப் பாதுகாப்புக் கைதியாக வேலூர் சிறைக்கு அனுப்பி விட்டார்கள். 9ம் தேதி கைதான ஆ. ரு. ஆ. ராம. சொக்கலிங்கம் செட்டியார் டாக்டர்.

எஸ். சுப்பிரமணியம் ஆகிய இருவரையும் பாதுகாப்புக் கைதியாக வைத்தனர்.

**அடக்குமுறை பெருங் கொடுமை:** இந்திய நாட்டின் விடுதலையின் இறுதிப் போராட்டமான **1942** ஆகஸ்ட்டுப் போராட்டத்தை அடக்குவதற்காக வெள்ளைக்கார அரசாங்கம் செய்த அடக்கு முறை இராமநாதபுரம் ஜில்லாவில் குறிப்பாக திருவாடானைத் தாலூகாவில் நடந்த கொடுமைபோல் எங்கும் நடந்திருக்காது. கூட்டம் கூட்டமாக விவசாயப் பெருங்குடி மக்களை ஆண்களையும், பெண்களையும் கைது செய்து போலீஸார் ஆட்டுமந்தைகளைப் போல் நடத்திச்சென்று 10 பேர் இருக்கக் கூடிய சப் ஜெயில் ரூம்களில் 50 பேர் 60 பேர்களை அடைத்தார்கள். ஆண்களையும், பெண்களையும் சேர்த்து அடைத்தார்கள். மகனையும், மகளையும், மனைவியையும் கூட்டத்தோடு ஒன்ருக அடைத்தார்கள். இப்படி இரவு பகலாக அடைத்து மூச்சுக் கூட விடமுடியாமல் சித்திரவதை செய்தார்கள். தந்தையையும், மகனையும் மரங்களிலே கட்டி வைத்துவிட்டு அவர்களுக்கு முன்னுல் தாயைக் கொண்டுவந்து நிறுத்தி மானபங்கம் செய்தார்கள். பலரைக் கட்டி வைத்துச் சுட்டுக் கொன்ருர்கள். போலீசாரின் சித்திரவதை தாங்காமல் தண்ணீர், தண்ணீர் என்று கதறியவர்களுக்கு மனிதனின் சிறுநீரைக் கொடுத்துக் குடிக்குமாறு அடித்தார்கள். இப்படியாகத் திருவாடானைத் தாலூகா முழுதுமொரு பேய் வனமாகியது, நூற்றுக் கணக்காஞேரை கைது செய்து மதுரைச் சிறையிலே தள்ளி விசாரணையின்றி 10 மாதம், 11 மாதங்கள் வைத்து வதைத்தார்கள். பொ. செல்லத் துரை

தலைமறைவாகப் போய்விட்டார். போலீசாரால் பிடிக்க முடியவில்லை. இதனால் செல்லத் துரையைக் கண்ட இடத்தில் சுட உத்தரவு போட்டார்கள். தொண்டர் முத்தையாவைக் கைது செய்து லாக்கப்பில் வைத்து அடித்து நொறுக்கினார்கள். மறுநாள், அவர் தலையை மொட்டை அடித்து கறும்புள்ளி, செம்புள்ளி குத்தி, இடுப்பிலே ஒரு துண்டை மட்டும் கட்டச் சொல்லி இரண்டு கைக்கும் இரும்புச் சங்கிலி, இரண்டு காலுக்கும் சங்கிலி போட்டுக் கட்டி மொட்டைமாட்டு வண்டியிலே நிறுத்தி வைத்துப் போலீசார் ஊர்வலமாக கொண்டுவந்தனர். கடைசியாக சப் ஜெயிலில் கொண்டு வந்து பிணத்தைப் போடுவதுபோல் போட்டனர். வெள்ளைக்காரர்கள் ஆண்டபோது சிறையிலே வேண்டுமானால் வருடக் கணக்கில் இருந்துவிடலாம், ஆனால் சப்ஜெயிலில் ஒரு மாதம் இருந்தாலே, பாதி உயிர் போய்விடும். 10 மதம், 11 மாதம் ஒவ்வொரு வரையும், விசாரணையில்லாமல் சப் ஜெயிலில் வைத்தால் என்ன ஆகும்? அந்தக் கொடுமைகளை நினைத்தாலே மனது பகீரென்கிறது. 1942 போராட்டத்தில் திருவாடானைத் தாலுகாவில் நடந்த அடக்கு முறையை ஜெர்மன் நாஜிக் கொடுமைக்கு ஒப்பிடலாம்.

**வீரர்கள் சிறைகளிலே பட்ட துன்பங்கள்:**

வெள்ளைக்கார ஆட்சி சுதந்திரப் போராட்ட வீரர்களை சிறைகளிலே நடத்தியவிதம் கொடுமையானது. திருடன், கொள்ளைக்காரன், கொலைகாரன் ஆகிய கிருமினல் கைதிகளை விட மிக மோசமாக விடுதலைவீரர்களை நடத்தினார்கள். விடுதலைப் போராட்ட வீரர்கள் பெரும்பாலோருக்கு C. வகுப்பே கொடுக்கப்பட்டது.

பலருக்கு "களிப்படி" என்று போட்டு வதைத்தார்கள். கேப்பைக் களி இரும்புத் தகடுகளிலே கட்டிகட்டியாக அடித்து வைத்து அதைச் சாப்பாட்டு மணி அடித்த வுடன் 4 பேர் தூக்கி வருவார்கள். இந்தச் சாப் பாட்டை வாங்குவதற்கு தங்களுக்குக் கொடுத்துள்ள அலுமினியத் தட்டையும், டம்ளரையும், கையிலே பிடித் துக் கொண்டு வரிசையாக நிற்கவேண்டும். ஒவ்வொரு வருக்கும் தட்டிலே அந்தக் கட்டி ஒன்றை வைத்து அதன்மேல் குழம்பு ஊற்றுவார்கள். அந்தச் சாப்பாட் டுக் கட்டியிலே இரும்புத்துருக் க ழு ம் பு நிறையப் பிடித்திருக்கும், குழம்பிலே செத்தப் புழுக்கள் மிதக் கும். இதைப் பார்த்து நெஞ்சம் துடிக்கும். வேறு என்ன செய்வது? வயிற்றுப் பசியோ தாங்க முடியாமல் இருக்கும். இந்த நிலையில் சாப்பாட்டை வாங்குவார் கள். வரிசையாக உட்கார்ந்து முதலில் சோத்துக் கட்டியில் சுற்றிப் பிடித்திருக்கும் இரும்புத் துருவைப் பிய்த்து கீழே போடுவார்கள். அடுத்து புழுக்களைப் பொறுக்கி எறிவார்கள். பின்னர் சாப்பிடுவார் கள். வருடம் பூராவும் நாள் தவறுமல் முள்ளங்கி, கீரை, பருப்பு, கீரைத் தண்டு, இவைதான் தினசரிச் சாப்பாட்டிற்கு. எத்தனை வருடமானலும் தலைக்கு எண்ணெ கொடுக்கமாட்டார்கள். மிளகு கலந்த ரசம் கிடைக்காது. இப்படிப் பட்ட சாப்பாட்டை வருடக் கணக்கில் தண்டனையடைந்தவர்கள் சாப்பிட்டால் அவர்கள் உடம்பு என்னவாகும்?

**முகச்சவரம் செய்வதற்குப் பேல்தகடு:** முகச் சவரம் செய்வவற்கு பேல்கள் கட்டிவரும் தகடுகளை வெட்டி அங்குள்ள கிரிமினல் கைதிகள் அதைக்

கல்லிலே போட்டுத் தீட்டி சவரக்கத்தியாக வைத்திருப் பார்கள். வாரம் ஒருதரம் சவரம் செய்ய வேண்டும். மொட்டையடித்துக் கொள்ளவேண்டும். 100 பேர், 200 பேர் வரிசையாக இருப்பார்கள். ஒவ்வொருவராக அந்தச்சவரம் செய்வோரிடம்சென்று உட்கார்ந்தவுடன் அந்த பேல் தகட்டுக் கத்தியால் தலையை மொட்டை. யடித்தால் சித்திரவதை, வேண்டாமென்றாலோ கான்விக்ட் வார்டன் விடமாட்டான். தலையைச் சிரச்சு முடிந்தால் தலை பூராவும் காயங்கள், ரத்தமய மாக இருக்கும். பின் முகச்சவரம் கேட்க வேண்டுமா? செதுக்கி எடுப்பான். எவ்வளவு உறுதி யான ஆளுக்கும் கண்ணீர் வரும். ஒரு மணிக்கு 20 பேர், 30 பேருக்கு செய்து விடுவான் எப்படி இருக்கும். சிறைக் கொடுமையிலே பெருங்கொடுமை மதுரைச் சிறை, அடுத்து அலிப்புரம் சிறை. 15 பேர் படுக்கக் கூடிய அறையிலே மாலை 6 மணியானவுடன் 40, 50 பேரை அடைப்பார்கள். ஒரு சாக்கு படுக்கை விரிப்பு, ஒரு கம்பளி போர்த்திக் கொள்ள, அந்த கம்பளியிலே சீலைப்பேன் கணக்கின்றி நெளியும், இவைகளை விரித்துக் கொண்டு படுத்தால், கொஞ்ச நேரத்தில் உயர இருந்து ஆயிரக்கணக்கில் மூட்டைப் பூச்சி உதிரும், இதை விளக்கைப் போட்டுப் பார்த்தால், பயங்கரமாய் இருக்கும், அவைகளை இரண்டு கைகளா லும் கூட்டி அள்ளி சாப்பாட்டுத் தட்டிலே வைத்திருக் கும் தண்ணீரிலே, போட்டு வைத்து காலையிலே வெளி யில் கொட்டுவார்கள். கொடுக்கப்பட்ட உடையோ, காலுக்கு வெள்ளை அரைக்கால் சட்டை, மேலே ஒரு வெள்ளைத்துணி குறைக்கைப் பனியன், தலைக்கு வெள் ளைக் குல்லா. சுதந்திரப் போராட்ட வீரர்கள் எப்படி

சிறையிலே கொடுமைப் படுத்தப் பட்டார்கள். அவை களையெல்லாம் தாங்கிக் கொண்டு பல வருடங்கள் சிறையிலே எப்படி இருந்தார்கள் என்பதை இதி லிருந்து யூகித்துக் கொள்ளலாம். உயர்ந்த லட்சியத் துக்காகத் தங்களையே அர்ப்பணித்துக் கொண்ட வீரர் கள் அல்லவா? அதனால் எதையும் தாங்கும் இதயம் கொண்டவர்களாகப் போராடினார்கள்.

இந்த நாட்டின் விடுதலைக்குப் போராடிய அத்தனை வீரர்களைப்பற்றியும் தேசம் பூராவும் நடந்த போராட் டங்கள் அத்தனையையும் இங்கு எழுத இயலாது, எனவே விடுதலைப் போராட்டத்தின் தன்மைக்கு எடுத் துக் காட்டாக சிலவற்றைக் குறிப்பிட்டு எழுதியுள் ளேன்.

### பஞ்சாப் படுகொலை

**1919**ல் முதல் உலக மகாயுத்தம் முடிந்தவுடன் யுத்தத்தில் நாம் நம்மை ஆண்ட பிரிட்டீஷ் அரசாங் கத்துடன் ஒத்துழைத்ததற்காக நமக்குக் கிடைத்த பரிசு ரௌலட் சட்டம், **பஞ்சாப் படுகொலை**, ஜாலியன் வாலாபாக்கிலே. நிரபராதிகளாக ஆண்களும், பெண்களும் குழந்தைகளும் பல்லாயிரக்கணக்கில் கூடியிருந்த மக்களைத் திடிரென்று வெள்ளைக்காரப் போலீஸார் நாலாபக்கமும் சூழ்ந்து கொண்டு மைதா னத்துக்கு இருந்த இரண்டு வழிகளிலும் அடைத்துக் கொண்டு எந்தவிதமான முன்னெச்சரிக்கையுமின்றி மக்கள் கூட்டத்தின் மீது டயர் என்ற பெயர் படைத்த பாவி சுட உத்தரவிட்டான். சுட்டார்கள், சுட்டுக் கொண்டே இருந்தார்கள், அதிர்ச்சியடைந்த மக்கள் கூட்டம் பெண்களும், ஆண்களும், குழந்தைகளும் நாலா பக்கமும் ஓடினர். வெளியே போக வழியில்லை.

துப்பாக்கிக் குண்டுக்கு ஆயிரக்கணக்கானோர் இரை யானார்கள். ஒருவரோடொருவர் சாய்ந்து ரெத்த வெள்ளத்தில் மிதந்தனர். கண்ணீர் விட்டுக் கதறினர். தண்ணீர், தண்ணீர் என்று கேட்டுச் சாய்ந்து மடிந்தனர். துப்பாக்கிகளில் குண்டு இருக்கும்வரை சுட்டு ஆயிரக்கணக்கான மக்களைக் கொன்று குவித்த பின்னர் சுட்டேன், சுட்டேன், சுட்டேன். குண்டு தீரும்வரை சுட்டேன், குண்டு இருந்தால், இன்னும் சுட்டிருப்பேன் என்று கொக்கரித்தான் வெள்ளைக்காரத்துரை மகன் டயர். இந்த பயங்கரப் பஞ்சாப் படுகொலை தான் இந்திய நாட்டின் விடுதலைப் போரில் கொந்தளிப்பை ஏற்படுத்தியது. ஒரு புதிய திருப்பத்தை ஏற்படுத்தியது. காந்திஜி போன்ற தலைவர்கள் வெள்ளைக்காரர்கள் மீது வைத்திருந்த பாசத்தை விட்டொழித்தனர். "தேசம் பூராவும் உள்ள தேச பக்த வீர இளைஞர்கள் கொதித்தெழுந்தனர். ரெத்த வெறிபிடித்த கொலைகார ஆட்சியாளர்களை பழிக்குப் பழிவாங்குவோம். என்ற சபதமேற்றனர், அன்னிய வெள்ளைக்கார ஆட்சியை ஒழித்து சுதந்திரம் அடையும் வரை ஓய்வின்றிப் போராட விரதம் பூண்டனர்.

பாஞ்சால சிங்கம் லாலாலஜபதிராய், ரௌலட் சட்டத்தை எதிர்த்து ஊர்வலம் நடத்தும்போது வெள்ளைக்காரப் போலீசார் லத்திகளால் அடித்து நடுரோட்டில் சாய்த்தனர். அதே வேதனையில் படுக்கையில் இருந்து உயிர் விட்டார். பாய் பரமானந்தர் பரீந்திரகுமாரகோஷ், சவர்க்கர் போன்றவர்கள் ஆயுள் தண்டனை விதிக்கப்பட்டு அந்தமான் சிறையில் வாடினர். வ. உ. சிதம்பரம் பிள்ளை, வந்தேமாதரம்

சுதந்திரம் எனது பிறப்புரிமை என்று முழங்கிய திலகரின் சிஷ்யரானதால், சொந்த நாட்டில் சுதேசிக்கப்பல் ஓட்டிய குற்றத்திற்காகக் கொடும் சிறைத்தண்டனை, சிறையிலே செக்கிழுத்தார் அந்நிய ஆட்சியை அகற்ற வேண்டும் என்று பேசிய குற்றத்துக்காகச் சுப்பிரமணியசிவாவிற்கு ஜென்ம தண்டனை விதித்தார்கள். வாழ்விலே பெரும்பகுதி சிறையிலே இருந்ததால் சிறையின் கொடுமையால், குஷ்ட நோய் வந்துவிட்டது. சித்திரவதைப் பட்டுக் காலமானுர். ராஷ்பிகாரி கோஷ், லாலா ஹரிதயாள், சடோபாத்தியாயா, செண்பகராமன் பிள்ளை முதலியோர் விடுதலை இயக்கத்துக்காக அன்னிய நாட்டில் அவதிப்பட்டார்கள். ஸ்ரீ அருன் சந்துரகுகா, கணேஷ்கோஷ் டாங்கே, போன்ற புரட்சி வீரர்கள் 24 வருடங்கள் சிறையிலே வாடினர். பணடித மோதிலால் நேரு இந்தியாவிலேயே ஈடு இணையற்ற செல்வந்தராகவும் லட்சக்கணக்கில் சம்பாதிக்கக் கூடிய வக்கீலாகவும், குபேர வாழ்க்கை வாழ்ந்தார். இவைகளையெல்லாம உதறித்தள்ளிவிட்டு விடுதலைப் போரில் கலந்து கொண்டார். சிறைதண்டனை பெற்ருர். அவரது மனைவி சொரூபராணியும் விடுதலைப் போரிலே சிறை சென்ருர். தன்னுடைய ஆனந்த பவனமென்னும் அரண்மனையை விடுதலை இயக்கத்துக்கு இனமாக வழங்கினுர். தனது ஈடு இணையற்ற செல்வம், ஆசைக் குமரன், பண்டித ஜவஹர்லால் நேருவையும் தேசத்துக்காகக் காந்திஜியிடம் ஒப்படைத்தார். கடைசியாக சிறைக் கொடுமை தாங்காமல் போராட்ட காலத்திலேயே காலமானுர். அருமைத் துணைவியார் சொரூபராணியும் போராட்ட காலத்திலேய காலமானுர்கள். பண்டித மோதிலால்

நேரு காலமான செய்தி கேட்டுப் பாரத மக்கள் ஆராத் துயரத்தில் ஆழ்ந்தனர். பண்டித மோதிலால் நேரு குடும்பத்தைப் போல் தியாகக் குடும்பத்தை உலகில் எங்கும் பார்க்க முடியாது.

பம்பாய் நகரத்தில் அந்நியத் துணிக்கடை மறியல் நடந்து கொண்டிருக்கிறது. அந்தக் கடையிலே கொண்டு வந்து இறக்க ஒரு லாரி நிறைய அந்நியத் துணிப் பேல்கள் ஏற்றிவரப் பெற்றன. இதைப் பார்த்துக் கொண்டிருந்த மறியல் செய்த தொண்டன் 10 வயதே நிரம்பிய பாலகன் பாபுகான் இந்தத் துணிப் பேல்களை இங்கே இறக்காதீர்கள் என்று கும்பிட்டுக் கேட்டான். லாரிக்காரர்கள் கேட்கவில்லை. பாபு கான், நான் லாரியைப் போகவிட மாட்டேன் என்று கீழே படுத்து மறியல் செய்தான். அந்தச் சண்டாளர் கள் லாரியைப் பாபுகான் மீது ஏற்றினார்கள். பாபு கான் உடல் நசுங்கி அந்த இடத்திலேயே உயிர் பலியானது.

### லாகூர் சதி வழக்கு

வெள்ளைக்கார ஆட்சியை நாங்கள் வெறுக் கிறோம் என்பதற்கு அடையாளமாக டில்லி சட்டசபை யிலே, பகலிலேயே, பாஞ்சால சிங்கங்கள், பகத்சிங், ராஜ குரு, சுகதேவ் முதலியோர் வெடி குண்டை எறிந் தார்கள். அவர்களைக் கைது செய்து அவர்கள் மீது லாகூர்ச் சதி வழக்கென்று ஒன்றை ஜோடித்து நடத்தி, பகத்சிங், சுகதேவ், ராஜகுரு, மூவருக்கும் தூக்குத் தண்டனை விதித்தது அந்நிய ஆட்சி. 1930ல் முதல் வட்ட மேஜை மகாநாட்டுக்குப் போய்விட்டுக் காந்தி யடிகள் திருமபிவரும் போதே, இந்தியாவில் இந்த வீரர்

கள் மூவரையும் தூக்கிலிட்டுக் கொன்று விட்டார்கள். பகத்சிங், ராஜகுரு, சுகதேவ் மூவரும் தாய் நாட்டின் விடுதலைக்காகத் தூக்கு மேடையிலே தங்கள் இன்னு யிரைப் புன்முறுவலோடு பலி கொடுத்தனர். சட்ட மறுப்புப் போராட்டம், திருப்பூர் நகரிலே தேசீயக் கொடியை ஏந்தி வீர இளைஞர்கள் ஊர்வலம் வருகிருர் கள். ஊர்வலத்தின் முன்னே குமாரசாமி (திருப்பூர் குமரன்) கொடி பிடித்து வீர முழக்கமிட்டு வருகிருன். போலீஸ்படை ஊர்வலத்தைத் தடுத்து நிறுத்தித் தடி கொண்டு தாக்குகிருர்கள். அடிகளை தாங்கிக் கொண்டே, வந்தேமாதரம் என்று தொண்டர்கள் முழங்கினுர்கள், குமரன் கையில் இருந்த கொடியைப் போலீசார் பிடுங்க முயற்சித்தனர், முடியவில்லை. குமரனைப் போலீசார் தடிகொண்டு பலமுறை அடித் துக் கீழே சாய்த்தனர். குமரனின் மண்டை பிளந்தது. ரெத்த வெள்ளத்தில் கிடந்த வீரன் தன் கையிலிருந்த தேசீயக் கொடியை மட்டும் கையிலிருந்து விடவில்லை. கொடியைக் கொடுக்க மறுத்த குமரனைப் போலீசார் மறுபடியும் அடித்து நொறுக்கினுர்கள். குமரன் உயிர் விட்டான். ஆனுல் தன் கையிலிருந்த கொடியின் பிடியை மட்டும் கடைசிவரை விடவில்லை. குமரனின் உயிரைப் பரித்த பின்னர்தான் அவன் கையிலிருந்த கொடியைப் பரித்தனர் போலீசார்.

குமரனைப்போல்,பாபுகானைப்போல் லாலாலஜபதி யைப்போல், பகத்சிங், ராஜகுரு, சுகதேவைப்போல் வாஞ்சுவைப்போல் ஆயிரக்கணக்கான வீரர்கள் இந்த நாட்டின் விடுதலைக்காகத் தங்கள் உயிரைப் பலி கொடுத்திருக்கிருர்கள்.

பாரதியைப்போல், சத்தியமூர்த்தி, காமராஜ், முத்துரங்க முதலியார், பக்தவச்சலம், சுப்பிரமணியம், அழகேசன், ருக்மணி, லட்சுமிபதி, சஞ்சீவி ரெட்டி, பிரகாசம், நிஜலிங்கப்பா, சரோஜினிதேவி, கமலாதேவி கல்பனு, இந்திரா காந்தி, விஜயலட்சுமி பண்டிட் வல்லபாய் படேல், ஜெயப்பிரகாஷ், நேத்தாஜி சுபாஸ்சந்திர போஸ், லால்பகதூர் சாஸ்திரி, பண்டித நேரு போன்ற மேதைகள், ஐ என் ஏயினர் ஆகியோர் நாட்டின் சுதந்திரத்திற்காக சர்வபரித்தியாகம் செய் திருக்கிருர்கள். இப்படியாக தேசபக்தியால் சான்ரோரும், நல்லோரும் செய்த தியாகத்தால் நமது நாட்டு மக்கள் 2000 வருடங்களாக இல்லாத உண்மையான சுதந்திரத்தைப் பெற்றனர். நம் நாடு விடுதலையடைந்த பிறகுதான் உலகில் அடிமைப்பட்டுக் கிடந்த அத்தனை மக்களுக்கும் தன்னம்பிக்கை ஏற்பட்டு சுதந்திரத்துக் காகப் போராடினுர்கள், விடுதலையடைந்தனர். ஆகவே இந்திய நாட்டின் விடுதலைக்குத் தியாகம் செய்தவர்கள் உலக மக்களின் விடுதலைக்கே தியாகம் செய்தவர்கள்.



## தமிழ்நாடு காங்கிரஸ் அரசியல் தியாகிகள் சங்கம் 10 ஆண்டுகள்

11—7—1958ல் அருப்புக்கோட்டை காங்கிரஸ் ஆபீசில் நடந்த அரசியல் தியாகிகள் கூட்டத்திற்கு A. பாலகிருஷ்ணன் தலைமை வகித்தார். பல பகுதிகளிலிருந்து தியாகிகள் வந்திருந்தனர்.

தமிழ் மாநில ரீதியில் அரசியல் தியாகிகள் சங்கம் அமைத்து வேலை செய்வதென்றும் இச் சங்கத்திற்கு, தமிழ் நாடு காங்கிரஸ் அரசியல் தியாகிகள் சங்கம் என்று பெயரிடுவதென்றும் தீர்மானிக்கப்பட்டது. இச் சங்கத்திற்கு A. பாலகிருஷ்ணன் திரு. K. கன்னையா ஆகியோர் கன்வீனர்களாகத் தேர்ந்தெடுக்கப் பெற்றனர்.

## திருப்பூர் குமரனுக்கு சிலை? இந்திய சர்க்காருக்கு வேண்டுகோள்.

(4-12-58 சுதேசமித்திரன் செய்தி) காரைக்குடி, டிசம்பர் 2ல் சரித்திரப் பிரசித்திபெற்ற டில்லி செங்கோட்டை எதிரில் இந்திய விடுதலைப் போராட்டத்தில் 1857 முதல் 1947 வரை உயிர்நீத்த தியாகிகளுக்கு ஞாபகச் சின்னம் இந்திய சர்க்காரால் எழுப்பப்படும் என்று செய்திகள் வெளியாகியுள்ளன. இந்தத் தியாகிகள் சிலை ஜாபிதாவில் இந்தியாவின் ஈடு இணையற்ற தியாகி தேசியக் கொடிக்காக உயிர்நீத்த திருப்பூர் குமரனுக்கு சிலை எழுப்பப்படுமா என்பதை நாம் அறியவேண்டும். ஏன் நமக்கு இந்த சந்தேகம் என்றால்

தென்னுட்டின் சிறந்த தேசபக்தர்களும், தேசிய கவிஞர்களும் என்ன காரணத்தாலோ முக்கியத்துவம் கொடுக்கப்படாமல் இந்திய சர்க்காரால் புறக்கணிக்கப்படுகின்றனர். உதாரணமாக தபால் தலைகளில் தேசிய கவிஞர்களின் படங்களை வெளியிட்ட இந்திய சர்க்கார் தமிழ் நாட்டின் சிறந்த தேசியக் கவிஞரான சுப்பிரமணிய பாரதியாரின் படத்தைத் தபால் தலைகளில் வெளியிடவில்லை. எனவே இதுபோல் தியாகிகள் சிலை அமைக்கும் விஷயத்திலும் நடந்துவிடக் கூடாது. ஆகையால் தமிழக மக்கள் அனைவரும் இதுபற்றி இந்திய சர்க்கார் உள்நாட்டு மந்திரி ஸ்ரீ பந்த்துக்கு எழுதுமாறும், தாமும் இந்திய சர்க்காருக்கு எழுதியிருப்பதாகவும் ரா்மநாதபுரம் ஜில்லா காங்கிரஸ் தியாகிகள் சங்கத் தலைவர் ஸ்ரீ கே. கன்னையா ஒரு அறிக்கையில் கூறுகிருர்.

No. D. 6186/58. C. 2.
Government of India
Ministry of Scientific Research &
Cultural Affairs.
New Delhi-2, dated the 19 February 1959.

*From*

Shri V. P. AGRIHOTRI, Under Secretary to the Government of India.

*To,*

Shri K. KANNAIAH, President, Ramanathapuram District Congress Political Sufferes Association, Karaikudi.

*Subject :-*

Raising of Statues in the Red Fort in commemoration of the martyrs of freedom Struggle.

*Sir,*

In continuation of Dr. A. M. D. Rozario's D. O. letter of even number dated the **17th** December **1958.** I am directed to say that the Government of India are condemplating the setting up of an All India Memorial in commemoration of all those martyrs who laid down their lives in the struggle for India's freedom. In front of the Red Fort remparts Delhi. This will, however, be without any reference to names of Individual fighters in the case of India's freedom. There is no proposal to erect individual statues for these partriots.

Yours faithfully,
V. P. AGRIHOTRI,
Under Secretary.

**மதுரையில் சங்கக் கமிட்டிக் கூட்டம்**

*20-7-59 திங்கட்கிழமை, மாலை 3-30 மணிக்கு மதுரை லஜபதி நிலையத்தில் நடந்த தமிழ் நாடு காங்கிரஸ் அரசியல் தியாகிகள் சங்க கமிட்டிக் கூட்டத்திற்கு வந்திருந்தவர்கள் 30 பேர்கள். கூட்டம் மதுரை, வந்தேமாதரம் செட்டியார் தலைமையில்*

ஆரம்பமாயிற்று. கூட்டத்தின் நோக்கம் பற்றி சங்கக் கன்வீனர் K. கன்னையா விளக்கிப் பேசினர். அடுத்து மதுரை ஜில்லா தியாகிகள் சங்கத் தலைவர் ஸ்ரீ ரா.சீனிவாசவரதன், பரம்பக்குடி தியாகிகள் சங்கக் காரியதரிசி A. V. சிவராமசாமி, ராமநாதபுரம் ஜில்லா சங்கக் காரியதரிசி A. பாலகிருஷ்ணர் ஆகியோர் பேசினர்கள்.

## தீர்மானங்கள்

1. சமீபத்தில் அகால மரணமடைந்த அரசியல் தியாகிகளுக்கு இக்கூட்டம் தனது அனுதாபத்தைத் தெரிவித்துக் கொள்கிறது.

2. அரசியல் தியாகிகள் சிலருக்கு நிலமான்யம் கொடுத்தும், பலருக்கு நிலமான்யம் கொடுக்காமலிருப்பதும் நியாயமில்லை. எனவே எல்லா அரசியல் தியாகிகளுக்கும் வீர மான்யம் கொடுக்குமாறு கேட்டுக் கொள்ளுகிறது.

3. நிலமான்யம் கொடுக்கப்படும், கொடுத்திருக்கும் தியாகிகளின் நிலங்களைப் பண்படுத்தி விவசாயம் செய்ய வேண்டிய கடனுதவிகளைக் கொடுக்குமாறு சம்பந்தப்பட்ட அதிகாரிகளுக்கு உத்திரவிடுமாறு சர்க்காரைக் கேட்டுக் கொள்ளுகிறது.

4. அரசில் தியாகிகளின் குழந்தைகளுக்கு ஆரம்பக் கல்வியிலிருந்து, பட்டப் படிப்போ, தொழில் படிப்போ படித்து முடியும் வரை சம்பளம், ஸ்பெஷல் பீஸ், டிரஸ் அலவன்ஸ்,

புத்தகங்கள் வகையரு, ஹாஸ்டல் செலவு முதலியவைகளை சர்க்காரே கொடுக்க வேண்டுமென்றும், ஆரம்பக் கல்வி, ஹைஸ்கூல், காலேஜ் இவைகளில் அரசியல் தியாகிகளின் குழந்தைகளுக்கு தங்கு தடையின்றி முதலிடம் கொடுக்கும்படியும், படித்து முடிந்த பிறகு சர்க்கார் உத்தியோகங்களிலும் முதலிடம் கொடுக்க வேண்டுமென்றும் கேட்டுக் கொள்ளுகிறது.

5. கைத்தொழில் தெரிந்த அரசியல் தியாகிகளுக்கு அவர்கள் தங்களுக்குத் தெரிந்த தொழில்கள் நடத்துவதற்கு வேண்டிய யந்திரங்களையும், தளவாட சாமான்களையும் வாங்கி வைத்துத் தொழில் நடத்த பண உதவி செய்யும்படி சர்க்காரைக் கேட்டுக் கொள்ளுகிறது.

6. இந்திய சுதந்திரப் போராட்டத்தில் ஈடுபட்டு தண்டனை யடைந்து சிறை சென்றவர்கள் தான் தியாகிகள் என்று ஏற்கனவே சர்க்காரால் அங்கீகரிக்கப்பட்டபடி தான் தியாகிகளை நிர்ணயிக்க வேண்டுமென தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டியையும், சர்க்காரையும் கேட்டுக் கொள்ளுகிறது.

7. சமுதாய நலத்திட்டத்தின் கீழ் மனுச் செய்திருக்கும் அரசியல் தியாகிகளுக்குச் சுனங்காது வேலை கொடுக்குமாறு கேட்டுக் கொள்ளுகிறது.

8. தமிழ்நாடு அரசியல் தியாகிகள் மகாநாட்டை நடத்த சீக்கிரம் ஏற்பாடுகள் செய்வதென்று தீர்மானிக்கிறது.

9. தமிழ் நாட்டிலுள்ள எல்லா ஜில்லா, தாலுகா தியாகிகளின் சங்கங்களும் தங்களது முழு விலாசத்தையும், ஸ்ரீ கே. கன்னையா, கன்வீனர், காரைக்குடி, இராமநாதபுரம் ஜில்லா என்ற விலாசத்திற்கு எழுதுமாறு தியாகிகள் சங்கங்களைக் கேட்டுக் கொள்ளுகிறது.

10. காங்கிரஸ் சர்க்காரின் திட்டங்களையும் சாதனைகளையும் மக்களிடையே பரப்ப முழு முயற்சி எடுத்துக் கொள்ளுமாறு எல்லா தியாகிகளையும் கேட்டுக் கொள்ளுகிறது.

11. கடந்த இரண்டு மாத காலமாக, மதுரை ஹார்வி மில்ஸ் மூடப்பட்டு வேலையின்றி கஷ்டப்பட்ட ஆயிரக்கணக்கான தொழிலாளர் பிரச்னையில் சமரசத் தீர்வு கண்டது அறிந்து இக்கூட்டம் தனது மகிழ்ச்சியைத் தெரிவித்துக் கொள்ளுகிறது.

## தியாகிகளுக்கு பென்சன்

கே. கன்னையா. காரைக்குடி 28—11—58.

தலைவர் அவர்கள் தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டி

**சென்னை.**

ஐயா,

அடியிற்கண்ட தீர்மானத்தை கோபிச்செட்டி பாளையத்தில் நடக்கவிருக்கும் தமிழ்நாடு அரசியல்

மகாநாட்டில் கொண்டு வருகிறேன். அதனை தீர்மானங்களின் அஜண்டாவில் சேர்த்துக் கொள்ளுமாறு கேட்டுக் கொள்கிறேன்.

கே. கன்னையா
காரைக்குடி வடக்கு மண்டல
காங்கிரஸ் கமிட்டி பிரதிநிதி.

**தீர்மானம்**

இந்திய தேசத்தின் விடுதலைப் போராட்டத்தில் தங்களது முழு நேரத்தையும் ஈடுபடுத்தி பலவித கஷ்ட நஷ்டங்களுக்கு ஆளாகி சிறை சென்று, தங்களது வாழ்நாளில் பெரும் பகுதியை அர்ப்பணித்த அரசியல் தியாகிகள் இன்று தங்களது மனைவி மக்களை வாழ்விக்க வழியின்றி சொல்லமுடியாத துயரத்துக்கு உள்ளாகியிருக்கிறார்கள். காங்கிரஸ் ஸ்தாபனத்தை தமது சேவையால் வளர்த்தவர்கள் அதன் பெருமையை மக்களிடையே பரப்பியவர்கள். அந்த ஸ்தாபன ரீதியாகவே அதன் கட்டளைப்படி போராட்டத்தில் இறங்கி சிறை சென்றவர்கள்.

இன்று உண்ண உணவிற்கும் வழியின்றித் தெருத்தெருவாக ஊர் ஊராக பலர் அலைகின்றனர். இது சுதந்திர நாட்டில், சுதந்திரத்தைத் தேடித்தந்த கட்சியினர் ஆளும் போதே இந்த நிலை இருப்பது பரிதாபகரமானது. ஆகவே, காலதாமதம் செய்யாது சென்னை சர்க்கார் விடுதலைப் போராட்டத்தில் சிறை சென்று இன்று கஷ்டப்படும் தியாகிகளுக்கு மாதா மாதம் பென்சன் குறைந்த பட்சம் ரூ. 60 கொடுக்கும்

முறையில் சட்டம் இயற்றி உதவ வேண்டுமென்று இந்த மகாநாடு கேட்டுக் கொள்கிறது.

---

**குறிப்பு :** மகாநாடு விஷயாலோசனைக் கூட்டத்தில் இந்தத் திர்மானத்தை தள்ளுபடி செய்து மகாநாட்டுப் பொதுச் சபைக்கு வராமல் செய்து விட்டார்கள்.

## சோழவந்தான் மகாநாடு வரவேற்புக் கமிட்டி அமைப்புக் கூட்டம்.

11—10—1959ந் தேதி மதுரை லஜபதி நிலையத்தில் தமிழ் நாடு காங்கிரஸ் அரசியல் தியாகிகள் சங்கத்தின் சார்பில் 3-வது மகாநாடு சோழவந்தானில் நடத்துவதற்கு வரவேற்புக் கமிட்டி அமைப்புக் கூட்டம். ஸ்ரீ ரா. சீனிவாசவரதய்யங்கார் தலைமையில் நடைபெற்றது. சங்கக் காரியதரிசி திரு. K. கன்னையா மகாநாட்டின் வேலைத் திட்டங்களை விளக்கிச் சொன்ஞர். பின்னர் சோழவந்தானில் மகா நாட்டை நடத்துவது என்று தீர்மானிக்கப்பட்டு மகாநாட்டு வரவேற்புக் கமிட்டி அமைக்கப்பட்டது. கமிட்டிக்கு திரு. M. சின்னச்சாமிபிள்ளை, தலைவர் ஸ்ரீ. ரா. சீனிவாசவரதையங்கார், K. கன்னையா, கிருஷ்ணன் காரியதரிசிகள் கமிட்டி மெம்பர்களாக முனகால் பட்டாபிராமையா மற்றும் 50க்கு மேற்பட்டோர் கொண்ட கமிட்டி அமைக்கப்பெற்றது.

## தேசப்படம் எரிக்க 'தேசத் துரோகிகளை அனுமதிக்காதீர்கள்; சென்னை அரசாங்கத்துக்கு வேண்டுகோள்!

தமிழ்நாடு காங்கிரஸ் அரசியல் தியாகிகள்
**சங்கக் கன்வீனர் அறிக்கை.**

*(28-5-1960 சுதேசமித்திரன் செய்தி காரைக்குடி, மே 25. தமிழ்நாடு காங்கிரஸ் அரசியல் தியாகிகள் சங்கக் கன்வீனர் ஸ்ரீ கன்னையா எழுதுகிருர்.)*

இந்திய நாட்டின் விடுதலைக்காக இந்திய நாட்டு மண்ணிலிருந்து அன்னியர்கள் வெளியேற வேண்டுமென்பதற்காக அன்றைக்கு ஆயிரமாயிரம் தேசபக்தர்கள் தங்கள் வாழ்க்கையை அர்ப்பணித்துக் கொண்டு போராடிய காலத்தில் பாரத அன்னையின் கைகால்களில் பூட்டப்பட்டிருந்த விலங்குகளை உடைப்பதற்காக பகத்சிங், ராஜகுரு, சுகதேவ் தூக்கு மேடை ஏறிய நேரத்தில் திருப்பூர் குமரன் தேசீயக் கொடியைக் கையில் ஏந்தி அந்தக் கொடியின் மானத்தைக் காக்க கொடியைக் கையில் பிடித்தபடியே மண்டை பிளக்கப்பட்டு ரத்தப் பெருக்கெடுக்க உயிர்ப்பலியான சமயத்தில், இன்னும் பல்லாயிரம் தேசபக்தர்கள் வெள்ளையரின் வெஞ்சிறையில் வெதும்பியபோதும் நம் இயக்கத்தைக் கேலி செய்தும், இந்த தேசத்துக்கு துரோகம் செய்து கொண்டிருந்த தேசத் துரோகக் கூட்டத்துக்குத் தலைமை தாங்கிய அதே ஈ. வெ. ரா. தான் இன்று இந்திய தேசப்படத்தை எரிக்கப் போவதாச் சொல்கிருர். அன்று தேசீயக் கொடியை எரிக்க

முயன்ருர். நேரு படத்தைக் கொளுத்துவதாகச் சொன்ஞர். தேச பக்தியில்லாதவர்களுக்கு தேசத்தின் மானத்தைப் பற்றிக் கவலைப்படாதவர்களுக்கு இது சின்ன விஷயமாகத் தோன்றலாம். ஆனல் நமக்கு இது அலட்சியம் செய்யும் காரியமா? இந்த தேச சுதந்திரத்தைப் பெற, சம்பாதிக்க நாம் செய்த தியாகங்கள், பட்ட துன்ப துயரங்கள் கொஞ்சமா? எனவே அதன் அருமை, பெருமை நமக்குத்தான் தெரியும், அதனல் தேசத்தின் கௌரவத்தைப் பாதிக்கும் எந்தச் செயலையும் நாம்பார்த்துக் கொண்டிருக்க முடியாது. ஆகவே இந்த மன்னிக்க முடியாத தேசத் துரோகச் செயல்களை உண்மைத் தேசபக்தர்கள் அனைவரும் எதிர்த்து நிற்குமாறு கேட்டுக் கொள்வதுடன், சென்னை அரசாங்கம் இது விஷயத்தில் கடுமையான நடவடிக்கை எடுத்துத்தடுக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

## தியாகிகளுக்கு நியாயமான உதவியளிக்க சர்க்கார் அக்கறை.

## த. நா. காங்கிரஸ் தியாகிகள் மகாநாட்டில் ஸ்ரீ காமராஜ் உறுதி.

(18-6-60 தினமணி செய்தி சோழவந்தான், ஜூன் 12ம் தேதி தமிழ்நாடு காங்கிரஸ் அரசியல் தியாகிகள் 3-வது மகாநாடு சோழவந்தானில் இன்று மட்டப்பாறை ஸ்ரீ ஆர். எஸ். வெங்கட்ராமய்யர் பந்தலில் சென்னை ஸ்ரீ. கே. எஸ். ஏகாம்பரம் தலைமையில் நடைபெற்றது.

**கொடியேற்று விழா:** தேவாரப் பாடசாலை மாணவிகள் கடவுள் வணக்கம் பாடினர். தேசியக் கொடியை ஏற்றிவைத்து சென்னை ஸ்ரீமதி சரஸ்வதி பாண்டுரெங்கம் எம். எல். சி. பேசுகையில் எல்லோர் உள்ளத்திலும் சுதந்திர உணர்ச்சி கிளர்ந்தெழ காந்திஜியின் அஹிம்சா இயக்கம் உதவியதென்றும், நாட்டின் விடுதலைக்காக உயிரைக் கொடுத்தத் தியாகிகளின் சரிதத்தையும், அவர்கள் நோக்கங்களையும் மறக்க முடியாதென்றும், அவர்களை இத்தினத்தில் நினைவு கொள்ள வேண்டுமென்றும் கூறினார். ராஜ்ய மந்திரிகள், மற்றும் பலரிடமிருந்து வந்திருந்த வாழ்த்துச் செய்திகளை வரவேற்புக் கமிட்டிக் காரியதரிசி ஸ்ரீ கன்னையா வாசித்தார். அனைவரையும் வரவேற்று வரவேற்புக் கமிட்டித் தலைவர் ஸ்ரீ எம். சின்னச்சாமி பேசுகையில், இந்நகரில் காலஞ் சென்ற மட்டப்பாறை சிங்கம் என்று பெயர் பெற்ற ஸ்ரீ ஆர். எஸ். வெங்கட் ரர்மையா தீவிரமாக தேசீயப் போராட்டங்களை நடத்தினார்; என்றும் ஒத்துழையாமை இயக்கக் காலத்தில் நிலக்கோட்டைத் தாலூகாவில் கள்ளுக்கடைகளை யாரும் ஏலம் எடுக்க முன்வராமல் செய்தார் என்றும் மற்றும் இந்தியாவிலேயே யாரும் செய்யாத அரும் பெரும் செயலாக வெள்ளையரை வெளியேறக் கோரும் தீர்மானமொன்றை ஜில்லா போர்டில் நிறைவேற்றிய ஸ்ரீ முனகால பட்டாபி ராமையா முதலிய தியாகிகளின் தாலூகா என்றும் குறிப்பிட்டார். இன்றைய நிலையில் தியாகிகள் ஏழைகளில் ஏழையாய் உள்ளனரென்றும், நிலமான்யம் சிலருக்குக் கிடைத்தும், பலருக்குக் கிடைக்கவில்லையென்றும், கிடைத்தவர்களில் சிலர் அதன் பயனை அனுபவிக்க முடியாமல்

தவிக்கின்றனர் என்றும், தியாகிகளின் பஞ்சநிலை மாற வேண்டுமென்றும், தொண்டு செய்ய விரும்பும் தியாகிகளின் வாழ்க்கை வசதியுள்ளதாக அமையவேண்டுமென்றும் வரவேற்பில் மேலும் கூறப்பட்டது. பின்னர் பிரபல சினிமா நடிகர் ஸ்ரீ டி. ஆர். மகாலிங்கம், கொத்தமங்கலம் சீனு ஆகியோர் சில தேசிய கீதங்களைப் பாடினர்.

**ஸ்ரீ கக்கன் பிரசங்கம் :-** காந்திஜி படத்தைத் திறந்து வைத்து சென்னை ராஜ்ய பொதுமராமத்து இலாகா மந்திரி ஸ்ரீ பி. கக்கன் பேசுகையில் கூறியதாவது:- மதுரை ஜில்லாவில் நிலக்கோட்டைத் தாலூக்காவிலிருந்து பல உத்தம தியாகிகள் நாட்டின் விடுதலைப் போரில் பங்கு கொள்ள முன் வந்தனர். தேசிய பள்ளிக்கூடத்தை ஸ்ரீ சின்னச்சாமி பிள்ளை முதலியோர் உண்டியல் எடுத்து நடத்தினர். அங்கு கல்வி மட்டுமின்றிச் சுதந்திரத்தைப் பெறுவதற்கான ஆலோசனைகள் யோசிக்கப்பட்டு கூறப்பட்டன. தியாகிகள் மத்திய கமிட்டியொன்று நிறுவி அதன்மூலம் கோரிக்கைகளை நல்லமுறையில் சர்க்காருக்கு தெரிவிக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். தியாகிகளுக்கு எவ்விதத்தில் உதவி செய்தால் அது நிரந்தரமானதாய் இருக்கமுடியுமென்று யோசித்து முடிவு செய்து சர்க்காரிடம் கூறினால் அதைப் பரிசீலிக்க முடியும் பல்வேறு தியசக்திகளும், நாட்டில் குறிப்பாகக் கிராமங்களிலும், இளைஞர்களிடையேயும் பரவாவண்ணம் பார்த்துக்கொள்ள வேண்டியது தியாகிகள் கடமையாகும். ஸ்ரீ சத்தியமூர்த்திப் படத்தைத் திறந்து வைத்து ஸ்ரீ எஸ். சி. பாலகிருஷ்ணன் எம். பி.

பேசுகையில் காங்கிரஸ் தியாகிகள் ஸ்தாபன வேலை செய்யத் தக்கவகையில் அவர்களுடைய வாழ்க்கைத் தேவையைப் பூர்த்தி செய்ய ஏற்பாடு செய்ய வேண்டு மென்றும் ஸ்தாபன வேலையைப் பலப்படுத்துவதில் ஈடுபட வேண்டுமென்றும் கூறினர்.

சென்னை, ஸ்ரீ கே. எஸ். ஏகாம்பரம் தலைமை வகித்துப் பேசுகையில் கூறியதாவது:-

காந்திஜியால் ஆரம்பிக்கப்பட்ட எல்லாச்சட்ட மறுப்பு இயக்கப் போராட்டங்களிலும் பங்குகொண்டு உயிர்நீத்தத் தியாகிகள் அனைவருக்கும் அஞ்சலி. நாடு விடுதலையடைந்து 13-வது ஆண்டு துவங்கிவிட்டது. இந்தச் சூழ்நிலையில் தலைவர்கள், நம் நாட்டு மக்களின் வாழ்க்கையை உயர்த்துவதற்காகவும், நாட்டின் பெருமையைப் பாதுகாப்பதற்காகவும் பாடுபட்டு வரு கிறார்கள்: இதற்கிடையே நாட்டின் விடுதலைக்காகப் போராட்டங்களில் பங்கு கொண்டு தம் உயிர்களை அர்ப்பணித்த எண்ணற்ற தியாகிகளின் குடும்ப நிலை கள் மிகவும் பாதிக்கப்பட்டுச் சீர்கேடாக இருப்பதை யும், உயிருடன் இருக்கும் தியாகிகளின் வாழ்வையும், சீர்தூக்கிப் பார்த்துத் தியாகிகளின் நல்வாழ்வுக்கான செயல்களைச் செய்து முடிக்க ஸ்ரீ காமராஜ் தீவிர முயற்சி எடுத்துக்கொள்ள வேண்டும் என்பதைக் குறிப்பாக இம்மகாநாட்டின் சார்பிலே ஞாபகப்படுத்த விரும்புகிறேன். எந்த நாட்டில் அரசியல் போராட்டம் நடந்து, வெற்றி பெற்றாலும், அந்த நாட்டு விடுதலைக் காகப் பாடுபட்டுத் தியாகங்கள் செய்த அரும்பெரும் தியாகங்களுக்குத்தான் முதன்மைஸ்தானம் உண்டு என்பது யாவரும் அறிந்த விஷயம். ஸ்ரீ காமராஜுக்கு

நம் நாட்டில் ஏற்பட்டிருக்கும் எண்ணற்ற பொறுப்புள்ள வேலைகளின் காரணமாகக் கொஞ்சம்தாமதித்து தியாகிகளுக்கான நன்மைகளைச் செய்யலாமென்ற சூழ்நிலை ஏற்பட்டாலும் ஏற்படலாம். அதற்காக தியாகிகளாகிய நாம் மனமுடைந்து மாறுபட்டுவிடாமல் ஸ்ரீ காமராஜினால் நமக்குச் சகல நன்மைகளும், சௌகரியங்களும் உண்டாகுமென்ற நம்பிக்கையை உறுதிப்படுத்திக்கொள்ள வேண்டுமென்பதை இம் மகாநாட்டின் சார்பாகத் திடமாக கூறிக்கொள்ள விரும்புகிறேன். நாட்டின் விடுதலைப் போராட்டங்களில் தன்னுயிரை யெல்லாம் பணயம் வைத்துத் தியாகங்களும், சேவைகளும் புரிந்த காங்கிரஸ் தியாகிகளின் வாழ்க்கை தாழ்ந்துகொண்டிருக்கும் இந்த தருணத்தில் எந்தெந்த வகையில் என்னென்ன நன்மைகளைச் செய்ய வேண்டுமோ அவைகளைச் சிந்தித்துச் சீர் தூக்கிப் பார்த்துச் சீராகச் செய்து முடிக்கும் திறமையும், கடமையும் ஸ்ரீ காமராஜுக்கு உண்டு என்ற நம்பிக்கை என்னிடம் குடிகொண்டிருப்பதேயாகும். தற்காலத்தில் நமது நம்பிக்கைக்கும், பெருமைக்கும் பாத்திரமான ஸ்ரீ காமராஜ் தலைமையில் ஏற்பட்டிருக்கும் நல்லாட்சியை கவிழ்க்க வேண்டுமென்ற பொருமை எண்ணங்கள் கொண்டு பல்வேறு அரசியல் கட்சிகள் பலப் பல ரூபங்களில் வருகின்றன. அவைகளைக் கண்டு தியாகிகள் ஏமாற்றமடைந்து லட்சியங்களை பணயம் வைத்து விடக்கூடாதென்பதையும், கடந்த காலப் போராட்டங்களில் எத்தகைய கட்டுப்பாடான தியாக உணர்ச்சிகளுடன் நாட்டுக்காகப் பணி புரிந்தோமோ அதே உணர்ச்சியுடன் இம்மாதிரி

சந்தர்ப்பங்களிலும் சேவைசெய்யும் உறுதி பெற வேண்டுமென்றும் கேட்டுக் கொள்கிறேன்.

**ஸ்ரீ காமராஜ் பிரசங்கம்:-** ராஜ்யத்திலுள்ள அரசியல் தியாகிகளுக்கு நியாயமான உதவிகள் செய்ய சர்க்கார் மிகவும் அக்கறை கொண்டுள்ளது என்று சென்னை முதன் மந்திரி ஸ்ரீ காமராஜ் மகாநாட்டில் கூறினர். ஏற்கனவே நிலமாகவும், ரொக்க மான்ய மாகவும், வேலைகளாகவும், அரசியல் தியாகிகளுக்கு உதவியளிக்கப்பட்டுள்ளது. மேற்கொண்டு அரசியல் தியாகிகளுக்கு அளிக்கும் உதவி ஜனநாயக வரம்பிற் குட்பட்டதாக இருக்க வேண்டும். சர்க்கார் தனது கட்சியினருக்கு உதவுகிறுர்கள் என்ற கண்டனங் களுக்கு இடமளித்து விடாமல் மிகவும் ஜாக்கிரதை யாகயிருக்க வேண்டியது அவசியம். நாட்டிற்கு தங் கள் பணிகள் முடிவடைந்து விட்டதென்ற கருத்திற்கு அவர்கள் இடமளிக்கக்கூடாது அவர்களுடைய சேவை நாட்டிற்கு இன்றுமிகவும் தேவையாகும். ஏனெனில் வடக்கு எல்லையில் சீன ஆக்கிரமிப்பாளர் கள் உள்ளனர். நாட்டில் உள்ள கம்யூனிஸ்டுகள் ஆக்கிரமிப்பாளர்களை வரவேற்கையில் மாலையுடன் தயாராக உள்ளனர். பிரதமர் நேருஜியின் படத்தை தமிழ்நாடு காங்கிரஸ் பொக்கிஷதார் ஸ்ரீ கே. ராஜா ராம் திறந்து வைத்தார்.

மகாநாட்டில் நிறைவேறிய தீர்மானங்கள் வரு மாறு:— அண்மையில் நிறைவேற்றிய நில உச்சவரம்பு மசோதாவை முழுமனதுடன் வரவேற்பதுடன் இது போன்று, அசையும் பொருள், அசையாப் பொருள் களுக்கு உச்சவரம்பு கட்டவேண்டுமென்று நமது

மாநில சர்க்காரை இம்மகாநாடு கேட்டுக்கொள்கிறது. மறுபடியும் நிலமான்யம் வழங்க வழிவகைகள் செய்ய வேண்டுமாய் இம்மகாநாடு சர்க்காரைக் கேட்டுக் கொள்கிறது. நிலமான்யம் சர்க்காரால் கொடுக்க முடியாத, வாங்காத தியாகிகட்கு அவர்களின் ஜீவிய காலம் வரை வாழ்க்கை நடத்த இதர மாநிலங்கள் கொடுத்துள்ள மானியம் வழங்க வேண்டுமாய் நமது சர்க்காரைக் கேட்டுக் கொள்கிறது. அரசியல் தியாகி களின் குடும்பத்தில் உள்ளவர்களுக்கு தொழில், கல்வி வரை இலவசமாகப் படிக்கவும், உத்தியோகச் சலுகை கிடைக்கவும், வைத்திய வசதி அடையவும் பிரத்தி யேக சலுகைகள் அளிக்க வேண்டுமாய் நமது சர்க் காரைக் கேட்டுக் கொள்கிறது. ஸ்தல ஸ்தாபனம் கூட்டுறவு ஸ்தாபனம் போன்றவைகளில் தியாகிகள் திறமையுடன் பணியாற்றியும், பட்டப்படிப்பு இல்லை யென்ற காரணத்தால் மேலானபதவிகள் கொடுக்கா மல் தடைப்படுவதையும் நீக்கி அவர்களுக்கும் உயர் பதவி வழங்க வேண்டுமாய் சர்க்காரைக் கேட்டுக் கொள்கிறது! தமிழ்நாடு காங்கிரஸ் தியாகிகள் சங்கம் ஒவ்வொரு ஜில்லா தோறும் நிறுவி அந்தந்த ஜில்லா வின் தியாகிகளின் நலனில் கவனஞ் செலுத்த வேண்டும்.

## தேசப்படம் பிரசுரிப்பது குற்றம்.
## தியாகிகள் சங்க தலைவர் அறிக்கை.

(31—5—60 தினமணி செய்தி) தேவகோட்டை மே 31. தமிழ்நாடு காங்கிரஸ் அரசியல் தியாகிகள் சங்க கன்வீனர் காரைக்குடி ஸ்ரீ கே. கன்னையா எழுதியுள்ள கடிதமொன்றில் கூறியிருப்பதாவது:—

இந்திய சர்க்காரின் அனுமதி இல்லாமல் இந்திய தேசப் படங்கள் என்று சொல்லி யாரும் படங்கள் பிரசுரிக்கக் கூடாது என்று இந்திய சர்க்கார் ஏற்கனவே அறிவித் திருக்கிறது. அப்படி வெளியிடுவது ராஜாங்கத் துரோ கம், கிரிமினல் குற்றம். எனவே இந்திய தேசத்துக்குட் பட்ட தமிழ்நாடு நீங்கலாக இந்திய தேசியப்படம் என்றும் அதை எரிக்க லட்சக்கணக்கில் படம் தயாராக இருப்பதாகவும் ஸ்ரீ ஆதித்தன் அறிவிக் கிறார். ஆகவே இந்தப் படங்களை சட்டவிரோதமாக வெளியிடப்பட்டிருப்பதை படம் எரித்து அவர்கள் தேசத் துரோகம் செய்வதற்கு முன்பே உடனடி யாக பறிமுதல் செய்து நடவடிக்கை எடுக்க வேண்டு மாறு அரசாங்கத்தைக் கேட்டுக் கொள்கிறேன்.

காரைக்குடி
**30—3—60.**

**முதலமைச்சர் திரு. கே. காமராஜ் அவர்கள்**
சென்னை அரசாங்கம்.

சென்னை (காரைக்குடி முகாம்)

தமிழ்நாடு காங்கிரஸ் அரசியல் தியாகிகள் சங் கத்தின் சார்பில் அடியிற்கண்ட கோரிக்கைகளைத் தங்களுக்கு சமர்ப்பித்துக் கொள்கிறேன்.

1. சமுதாய நலத்திட்டம் பகுதிகளில் வேலை பார்க்கும் அரசியல் தியாகிகளை மூன்று மாதத்துக்கு ஒரு தரம் கூட்டி, திட்டம் நடைமுறையில் செயல்படும் விதம்பற்றியும், பொதுமக்கள் ஒத்துழைப்பு என்ன அவர்கள் திட்ட வேலைகளைப்பற்றி என்ன நினைக்கி

ருர்கள் ஆகியவைகளைப்பற்றி கருத்தரங்கு நடத்த வேண்டும். 2. சமுதாயத் திட்டம் பகுதியில் இப்பொழுது வேலை செய்யும் அரசியல் தியாகிகளில் நல்ல பேச்சாளர்களாக இருப்பவர்களை ஒவ்வொரு பிளாக்கிற்கும் பொதுப் பிரச்சாரர்களாக நியமித்து அதற்குத் தகுந்த வேலைத் திட்டம் அவர்களுக்குக் கொடுக்க வேண்டும். 3. நில உச்சவரம்புச் சட்டத்தின் மூலம் கிடைக்கும் உபரிகளை, நிலமானியம் கொடுக்காத, நிலமில்லாத, அரசியல் தியாகிகளுக்கு சாரி செய்து கொடுத்து அவைகளைக் கூட்டுறவு முறையில் விவசாயம் செய்வதற்கு ஊக்குவிக்க வேண்டும். 4. இறந்துபோன அரசியல் தியாகிகளின் மனைவிகள், குழந்தைகள் உள்ள குடும்பங்கள் நிராதரவாய் வறுமையில் வாழுகிறவர்களுக்குச் சர்க்கார் கால தாமதமின்றி உதவி செய்ய வேண்டும். 5. அரசியல் தியாகிகளின் குழந்தைகளுக்கு அரசாங்கம் இப்பொழுது அளித்துள்ள கல்விச் சலுகை போதுமானதாக இல்லை. எனவே ஆந்திர சர்க்கார், மைசூர் அளித்துள்ளது போன்று ஆரம்பப் படிப்பு முதல் கல்லூரிப் படிப்பு, தொழிற்படிப்பு, முதலிய பட்டப்படிப்புகளுக்கு சர்வகலாசாலை வரை கட்டணமின்றியும், ஹாஸ்டல் கட்டணம், பாடப்புத்தகங்கள் வாங்குவதற்குப் பணம் ஆகியவைகளுக்கு சர்க்கார் உதவவேண்டும். 6. தொழில் தெரிந்த அரசியல் தியாகிகளுக்கு அவர்களது தொழிலை நடத்த கருவிகள் வாங்க தொழில் நடத்த முடியாமல் இருப்பவர்களுக்கு சர்க்கார் ரொக்க உதவி உதவ வேண்டும். 7. நாம் சுதந்திரம் அடைந்த பிறகு நம் நாட்டில் ஏற்பட்டுள்ள பிரம்மாண்டமான அபிவிருத்தித் திட்டங்களான, பக்ரா-

நங்கள் போன்ற அணைக்கட்டுகள் துர்க்காபூர், சித்தரஞ்சன் போன்ற தொழிற்சாலைகளையும் பார்த்து வருவதற்கு ஜில்லாவிற்கு இரண்டு அரசியல் தியாகிகள் விகிதம் தமிழ்நாடு அரசியல் தியாகிகள் சங்கத்தின் சார்பில் அகில இந்திய சுற்றுப்பிரயாணக் கோஷ்டியைக் சர்க்கார் செலவில் அனுப்பி வைக்க வேண்டும்.

இங்ஙனம்,
**கே. கன்னையா.**
*30—3—60.*

**தேர்தலுக்கு காங்கிரஸ் அபேட்சா மனுக் கட்டணம் மிக அதிகம்.**

**அரசியல் தியாகிகளுக்கு விதி விலக்கு வேண்டும்!**

*(16—5—61 தினச் செய்தி)* காரைக்குடி மே. **15** தமிழ் நாடு காங்கிரஸ் அரசியல் தியாகிகள் சங்கச் செயலாளர் கே. கன்னையா பத்திரிக்கைகளுக்குக் கீழ்க்கண்ட அறிக்கையை விடுத்துள்ளார்!

வரும் பொதுத் தேர்தலில் காங்கிரஸ் அபேட்சகராக விருப்பம் தெரிவித்துக் காங்கிரஸ் கமிட்டிக்கு மனுச் செய்து கொள்ளும் ஒவ்வொருவரும் எம். எல். ஏ. வாக நிற்க விரும்பினால் ரூ. 1000மும், எம். பி. யாக நிற்க விரும்பினால் ரூ. 2500ரும் மனுவுடன் கட்டணத் தொகையாகக் கட்டவேண்டும் என்று விதித்திருப்பதாகத் தெரிகிறது. இது மி க வு ம் அதிகமானது பெரும் பணக்காரராக உள்ளவர்களுக்கு இது ஒரு

சிறிய விஷயமாகும். ஆனால் சாதாரணக் காங்கிரஸ் காரர்களுக்கு இது பெரிய பிரச்னை. பெரிய முட்டுக் கட்டையாகும். ஒருவர் சிறந்த காங்கிரஸ் ஊழியராகவும் அந்தப் பகுதி பொதுமக்களின் நன்மதிப்பை பெற்ற வராகவும் இருப்பார். அவர் காங்கிரஸ் அபேட்சகராக விருப்பம் தெரிவிக்க மனுச் செய்வதற்கே ரூ. 1000மும் 2500ம் கட்டவேண்டுமானால் எப்படி முடியும்? அபேட் சகராக நிறுத்தப்பட்டுவிட்டால் அவரது சேவை தியாகம், ஒழுக்கம் இவைகளை அறிந்த பொதுமக்கள் தங்களது ஓட்டையும் அளித்துச் செலவிற்கு நோட்டும் கொடுப்பார்கள்.

எனவே இன்றைக்கு நாட்டிலே நல்ல பல ஊழியர் கள் கொள்கைப் பிடிப்புள்ளவர்கள் இருக்கத்தான் செய்கிறார்கள். அவர்கள் அரசியலில் முன்னேற முடியா மல் இருக்கின்றனர். அவர்களைச் சில புதியபணக்காரர் கள் தடுத்து அடைத்துக் கொண்டு இருக்கிறார்கள். அவர்கள் இதைப் பூர்ணமாகப் பயன்படுத்துவார்கள். ஆகவே, இந்தக் கட்டணம் அரசியல் தியாகிகளுக்கு விதிக்கக் கூடாது விதிவிலக்களிக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

**தேர்தலுக்கு அபேச்சகர்கள் கொள்கைப் பிடிப்பு, கட்சிப்பற்று அற்றவர்களை நிறுத்தலாகாது:**

*(4—8—61 சுதேசமித்திரன் செய்தி)* காரைக்குடி ஆகஸ்ட் 1. தமிழ் நாடு காங்கிரஸ் தியாகிகள் சங்கச் சிறப்புக் கூட்டம் ஜூலை 30ந் தேதி இங்குத் தஞ்சாவூர் ஸ்ரீ ஜி. ராகவராவ் தலைமையில் நடைபெற்றது.

திருவாடானை பாலபாரதி ஸ்ரீ பொ. செல்லத்துரை கடவுள் வணக்கம் பாடினார். தலைவர் முன்னுரைக்குப் பின் நகரக் காங்கிரஸ் தலைவர் ஸ்ரீ அரு. ஆ. ராம. சொக்கலிங்கம் செட்டியார், டாக்டர் S. சுப்பிரமணியம் ஆகியோர் வந்திருந்தவர்களை வரவேற்றுப் பேசினார்கள். சங்கச் செயலாளர் ஸ்ரீ கே. கன்னையா இதுவரை நடந்துள்ள சங்கவேலைகள் பற்றியும் நடைமுறை பற்றியும் பேசினார், பின்னர் அடியிற்கண்ட தீர்மானங்கள் ஏகமனதாக நிறைவேற்றப்பட்டன. ஸ்ரீமான்கள் என். அண்ணாமலை பிள்ளை, திருப்புத்தூர் தாவுது ராவுத்தர், இடைக்காட்டூர் ஏ. கே. ஆறுமுகம்பிள்ளை, காசா. சுப்பாராவ் ஆகியோர் காலமானது குறித்து ஆழ்ந்த அனுதாபம் தெரிவித்துக் கொள்கின்றது. வெள்ளத்தால் பாதிக்கப்பட்ட மக்களுக்கு அனுதாபம் தெரிவிக்கப்பட்டது.

வரும் பொதுத் தேர்தலுக்குக் காங்கிரஸ் அபேட்சகர்களைத் தேர்ந்தெடுக்கும்போது 50 சதவிகிதம் சிறை சென்ற அரசியல் தியாகிகளைத் தேர்ந்தெடுக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்வதுடன் கொள்கைப்பிடிப்பும் கட்சிப் பற்றும் இல்லாதவர்களை எக்காரணத்தைக் கொண்டும் காங்கிரஸ் அபேட்சகராக நிறுத்தக் கூடாது என்று தமிழ் நாடு காங்கிரஸ் கமிட்டியையும் அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியையும் கேட்டுக் கொள்கிறது. மேலும் அந்தத் தொகுதியைச் சேர்ந்தவர்களையே தேர்ந்தெடுக்குமாறு கேட்டுக் கொள்கிறது.

மனச்சோர்வாலும், கருத்து வேறுபாட்டினாலும் காங்கிரசிலிருந்து விலகியிருப்பவர்கள் வேறு கட்சிக்குச்

சென்றவர்கள் ஆகியவர்கள் மீண்டும் காங்கிரசில் சேர்ந்து வர்க்கபேத மற்றச் சமுதாயத்தை அமைக்க உழைக்கவருமாறு சக தேச பக்தர்களை இக்கூட்டம் அழைக்கிறது.

தேசத்தின் விடுதலைக்காக எந்தப் பிரதி பலனையும் அன்றைக்கு எதிர்பாராமல் துன்பத்திற்கும் துயரத்திற்கும் ஆளாகி அரும்பெரும் தியாகங்கள் செய்த அரசியல் தியாகிகளைக் கௌரவிப்பதற்காக அவர்களுக்கு வழங்கப்பட்ட வீர நில மான்யம் சிலருக்குக் கொடுத்தும் பலருக்குக் கொடுக்காமலும் இருப்பது நியாயமல்ல. எனவே, எல்லா அரசியல் தியாகிகளுக்கும் கட்டாயமாக வீர நிலமான்யம் வழங்குமாறு தமிழ் நாடு அரசாங்கத்தைக் கேட்டுக்கொள்கிறது.

தியாகிகள் குழந்தைகளுக்கு அளித்துள்ள கல்விச் சலுகைகள், 6 மாதத்துக்கு மேல் சிறை சென்றவர்களுக்குத்தான் என்றிருப்பதைச் சிறை சென்ற எல்லா அரசியல் தியாகிகளுக்கும் கிடைக்குமாறு செய்யக் கேட்டுக்கொள்கிறது. குடியிருக்க வீடு இல்லாத அரசியல் தியாகிகளுக்கு வீடு கட்டிக் கொடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறது. வெள்ளக்கஷ்ட நிவாரணத்துக்கு ரூ. 15 அனுப்பப்பட்டது.

## புதிய நிர்வாகிகள் கமிட்டி

சங்கத்துக்குப் பின் கண்டவர்கள் நிர்வாகிகளாக ஏக மனதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

தலைவர் ஸ்ரீ வி. எஸ். சங்கரசுப்பிரமணிய முதலியார் திருநெல்வேலி, உபதலைவர் கே. வி. ராமசாமி கவுண்டர் M. L. C. கோயம்புத்தூர், செயலாளர்

ஸ்ரீ கே. கன்னையா, காரைக்குடி பொருளாளர் ஆறு. ஆ. ராம. சொக்கலிங்கஞ் செட்டியார், காரைக்குடி, கமிட்டி அங்கத்தினர்கள் பாலபாரதி ஸ்ரீ பொ. செல்லத்துரை திருவாடானை, டாக்டர் எஸ். சுப்பிர மணியம், ஸ்ரீ ஆர். எஸ். மணிபாரதி; திண்டுக்கல். ஸ்ரீ எம். சின்னச்சாமிபிள்ளை; சோழவந்தான். ஸ்ரீ ஆர். எஸ் குமாரசாமி; சென்னை, தேதியூர் ராமையா நன்னிலம், ஸ்ரீ T. V. சடகோபாச்சாரி; தஞ்சாவூர், ஸ்ரீ எஸ். குமாரசாமி; கரூர், ஸ்ரீ எஸ். ஏகநாதன் தேவகோட்டை மற்றும் தேவையானவர்களைச் சேர்த்துக் கொள்ள கமிட்டிக்கு அதிகாரம் அளிக்கப்பட்டது.

**All India Freedom Fighters' Conference**

**Laxmi Narain Dharmashala**
**Fatehpuri, Delhi-6.**
**4—9—61**

**Sri. K. Kanniah**
**Secretary**
**Tamil Nad Political Sufferers Association**
**Karaikudi**
**(Tamil Nad) S. India.**

**Dear Friend,**

**We cordially invite you to attend the First All India Conference of the freedom fighters' that will be held on Sep. 8th and 9th in Darbar - Hall, Chandi Chowk, Delhi under the president ship of Hon'ble Shri Jagjiwan Ram, Minister for Railways.**

Shri Lal Bhadur Shastri, Minister of Home Affairs, will inaugurate the Conference.

Gen. Secy. Reception Committee
Bhawani Shai Sharma
All India Freedom Fighters' Conference
Delhi.

The Tamilnad Congress Political Sufferers
Association KARAIKUDI
Dated : 6th Sep......1961.

To

Sri Raja Mahendra Pratap M. P.,
Chairman Reception Committee,
All India Freedom Fighters Conference.
Delhi.

Sir,

I have the honour of receiving your telegram and invitation to attend the conference the short time *does not permit us to participate.*

This Association Comprises all the District delegates of Tamilnad and by virtue of it became the State Association.

We all hope and wish for the success of the conference in every way for it is strongly endeavouring to help the political sufferers of the soil. We want your guidance in preparing the way for the welfare of our brethern the bravest sons of our motherland. We are conveying our best wishes for the success of the conference and also extend our Co - operation in all possible ways.

Thanking you,

Yours sincerely
K. Kanniah
Secretary.

## இந்திய சுதந்திரப் போராட்டம் நடத்திய அரசியல் தியாகிகள் உண்மை வரலாற்றைத் தயாரிக்க உள் துறை மந்திரி வேண்டுகோள்

(*10—9—61.* தினமணி செய்தி) புதுடில்லி செப். 8. தேச விடுதலைக்குப் போராடிய அரசியல் தியாகிகளது உண்மை வரலாற்றைத் தயாரிக்கும் வேலையை மேற்கொள்ளும்படி நாட்டிலுள்ள பல்வேறு ஸ்தாபனங்களை யூனியன் உள்துறை மந்திரி ஸ்ரீ லால்பகதூர் சாஸ்திரி இன்று கேட்டுக் கொண்டார். டில்லியிலுள்ள விடுதலை வீரர்கள் சங்கத்தின் முதலாவது அகில இந்திய மகாநாட்டை அவர் ஆரம்பித்து வைத்துப் பேசுகையில் உள்துறை இலாகா இராஜ்ய சர்க்கார்களின் ஆலோசனையுடன் அரசியல் தியாகிகளுக்கு உதவிபுரிய ஒரு திட்டம் தயாரித்துள்ளது என்றார். அத்தகைய தியாகிகளது உண்மை வரலாறு கிடைக்காதது மிகவும் சிரமமாக உள்ளது என்றும் கூறினர். அடிப்படைத் தேவைகளைப் பூர்த்தி செய்யக்கூடியதான நவ சமுதாய நிர்மாணத்துக்கு தற்போதைய பரம்பரையினர் பொறுப்பு ஏற்க வேண்டும் என்றும், இத்தகைய சமுதாயத்தை உருவாக்கா விட்டால் "சுய ராஜ்ய" போராட்டம் பூர்த்தி பெருது என்றும் கூறினர். அவர் மேலும் கூறுகையில் நாட்டின் மக்கள் நன்மைக்குப் பாடுபடும் பல அரசியல் கட்சிகள் உள்ளன என்றும், ஒவ்வொரு கட்சியிலும் விடுதலைக்காகப் போராடியவர்கள் உள்ளனர் என்றும், வெகுமதி அல்லது பரிசு வேண்டாமல் அவர்கள் தங்கள் கடமைகளைச் செய்துவருகின்றனர் என்பதில் சந்தேக

மில்லை என்றும் கூறினார். ரயில்வே மந்திரி ஸ்ரீ ஜக ஜீவன்ராம் இம்மகாநாட்டுககுத் தலைமை வகித்தார். சுதந்திர இந்தியா நிர்மாணத்துக்காகப் பாடுபட்டோர் அனைவரையும் அறிந்து கொள்வது இயலாதென்றும், அவர்களது ஞாபகார்த்தத்தை நிலைநாட்டும் ஒரே வழி, தனி நபருக்கும் சுதந்திர பாதுகாப்புள்ளதான காந்திஜி கனவுகண்ட இந்தியாவை உருவாக்குவதே யாகும் என்றும் அவர் கூறினார். சுரண்டலற்ற நவ சமுதாயத்தை சிருஷ்டிக்க வேண்டும் என்று அவர் கேட்டுக் கொண்டார். அரசியல் தியாகிகள் சர்க்காரிட மிருந்து உதவிபெற ஜில்லா மாஜிஸ்டிரேட்டுகளிட மிருந்து சர்ட்டிபிகேட்டுகள் பெறவேண்டியிருப்பது தனக்கு வேதனை தருகிறதென்றும் யார் அரசியல் தியாகி என்பதைத் தெரிந்துகொள்ள அவர்களுக்கு ஒரு ஸ்தாபனம் இல்லாததே இதற்குக் காரணம் என்றும்; அரசியல் தியாகிகள் உண்மை வரலாற்றை சேகரித்துத் தொகுக்க மகாநாடு முயற்சி எடுத்துக் கொள்ள வேண்டும் என்றும் ஸ்ரீ ஜகஜீவன்ராம் வற் புறுத்தினார். வீடு வாசல் இழந்து ஜீவனோபாயத்துக்கு வழியில்லாமல் இருக்கும் அரசியல் தியாகிகளுக்கு தங்கும் விடுதிகள் கட்டலாம் என்று யோசனை கூறி இந்த வேலையை சர்க்காரும், தனியார் ஸ்தாபனங் களும் மேற்கொள்ளலாம் என்று ஸ்ரீ ஜகஜீவன்ராம் கூறினார். உதவி தேவையாய் இருக்கும் சுதந்திர வீரர் களுக்கு உதவுவதும், அவர்களுடைய வரலாற்றைத் தொகுத்து வெளியிடுவதும், நினைவுச் சின்னங்கள் எழுப்புவதும்தான் இந்த மகாநாட்டின் நோக்கம் என்று இந்திய சுதந்திரர் போர் வீரர்கள் சங்கத்தின் பொதுக்காரியதரிசி டாக்டர் என். சி. சமந்த் சின்ஹா

எம். பி. கூறினர். ஆரம்பத்தில் ராஜமகேந்திர பிரதாப் பிரதிநிதிகளை வரவேற்றுப் பேசுகையில் தேச விடு தலைக்குப்பின் பெருமைப்படத்தக்கவாறு நாடு முன் னேறியிருப்பினும், உதவி தேவையாயிருக்கும் தியாகி களை பொதுவாக எல்லோரும் குறிப்பாக தேசிய சர்க் காரும் கவனிக்காமல் விட்டது வருந்தத்தக்கது என்று கூறினர். சர்க்காரின் தற்போதைய திட்டம் அவர்களு டைய தேவையைக் கவனிக்குமிடத்து போதவே போதாது என்ருர். இம்மகாநாட்டிற்கு சுமார் 500 பிரதிநிதிகள் வந்திருந்தனர்.

## தமிழ்நாடு காங்கிரஸ் அரசியல் தியாகிகள் சங்கக்கூட்டம் மதுரையில் நடைபெற்றது

(8—10—61 சுதேசமித்திரன் செயதி.) காரைக் குடி அக். 6 தமிழ்நாடு காங்கிரஸ் அரசியல் தியாகிகள் சங்கக்கூட்டம் அக். 3, 4 தேதிகளில் மதுரை ஹரிஜன சேவாலய கட்டிடத்தில் நடைபெற் றது. கூட்டத்திற்கு சங்க உபதலைவர் ஸ்ரீ. கே. வி. ராமசாமி கவுண்டர் (எம். எல். சி.) தலைமை வகித் தார். அவ்வமயம் அரசியல் தியாகிகளான சர்தார் வேதரத்னம் பிள்ளை, வேலூர் ஸ்ரீ குப்புசாமி முதலி யார், எம். எஸ். சுப்பிரமணிய ஐயர், அஞ்சலை அம் மாள், பி. சீனிவாசராவ், மாதூர் சுப்பிரமணிய பிள்ளை ஆகியோர்கள் காலமானது குறித்து தனது ஆழ்ந்த அனுதாபத்தை தெரிவித்துக் கொண்டு தீர்மானம் நிறைவேறியது. சங்க செயலாளர் ஸ்ரீ கே. கன்னையா, சங்க வரவு செலவுக் கணக்கைப் படித்தார். சங்கத்தின் எதிர்கால வேலைத் திட்டம்பற்றி சென்னை ஸ்ரீமான்கள் ஆர். எஸ். குமாரசாமி, திருவாடானை

பொ. செல்லத்துரை, கே. கன்னையா, கோவை முத்து கிருஷ்ணன், நெல்லை பி. சந்தானம் பிள்ளை, மதுரை ஆர். குருநாதன் ஆகியோர் பேசினார்கள். தமிழ்நாட்டில் உள்ள எல்லா ஜில்லா தியாகிகள் சங்கங்களையும் இத்துடன் இணைத்துவிடுவதென்று தீர்மானிக்கப்பட்டது. சங்கத்தின் நடைமுறை செலவிற்கு அரசியல் தியாகிகள் அனைவரும் சங்க செயலாளருக்கு முடிந்த உதவியை அனுப்பி வைக்க கேட்டுக் கொள்ளப்பட்டது. செயலாளர் ஸ்ரீ கே. கன்னையா நன்றி கூறினார்.

## கோயம்புத்தூரில் சங்கக் கூட்டம்.

கோயம்புத்தூர் 26—1—1962 வெள்ளிக்கிழமை மாலை 3 மணிக்கு பெரியகடை வீதி நஞ்சப்பா அறநிலையக்கட்டிடத்தில் சங்கக் கூட்டம் உபதலைவர் K. V. ராமசாமிக் கவுண்டர் தலைமையில் நடைபெற்றது. அரசியல் தியாகிகள் பிரச்னை பற்றியும், தேர்தலில் காங்கிரஸ் அபேட்சர்கள் தேர்வு நடத்தியுள்ள முறை பற்றியும் பலர் பேசினர். பல தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன. கோவை ஜில்லா அரசியல் தியாகிகள் மகாநாடு கல்யாண மஹாலில் -27ந் தேதி நடைபெற்றது. மத்திய சர்க்கார் மந்திரி, திரு. C. சுப்பிரமணியம் அவர்கள் மகாநாட்டைத் துவக்கி வைத்துப் பேசினார். தியாகிகள் பிரச்னை பற்றி மகாநாட்டில் பல தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

## டெல்லி மந்திரிக்கு தியாகிகள் தந்தி! உடனே உதவி செய்யுங்கள்.

(13—6—62 மாலை முரசு செய்தி) காரைக்குடி, ஜூன். 13. "உடனே உதவி செய்யுங்கள்"

என்று காங்கிரஸ் தியாகிகள் சங்கம் டெல்லி மந்திரிக்கு தந்தி கொடுத்து இருக்கிறது. தந்தி:— தமிழ்நாடு காங்கிரஸ் அரசியல் தியாகிகள் சங்கம் சார்பில் டெல்லி மந்திரி லால்பகதூர் சாஸ்திரிக்கு ஒரு தந்தி கொடுக்கப்பட்டிருக்கிறது. அதில் கூறப் பட்டு இருப்பதாவது:— சுதந்திரம் அடைந்து 15 ஆண்டுகள் ஆகின்றன. இந்தக் காலத்தில் நாட் டில் உள்ள பலதரப்பட்ட மக்களின் சுகத்துக்காக டெல்லியில் திட்டமும் சட்டமும் போடப்பட்டு இருக் கிறது. ஆனால் நாட்டு விடுதலைக்குப் போராடிப் பெரிய தியாகம் செய்த அரசியல் தியாகிகளுக்கு இதுவரை எந்தச் சட்டமும் போடப்படவில்லை. உதவி செய்யுங் கள்:— இந்த சமயத்தில் அரசியல் தியாகிகளுக்கு பயன்படும் ஒரு மசோதாவை டெல்லி சட்டசபையில் எல். சி. சம்சந்தா, வசந்த குமார்தாஸ் ஆகிய 2 மெம் பர்கள் கொண்டு வந்திருக்கிறார்கள். அந்த தீர்மா னத்தை டெல்லி மந்திரி லால்பகதூர் சாஸ்திரி வர வேற்று ஆதரிக்க வேண்டும். அரசியல் தியாகிகளுக்கு உடனே உதவி செய்யுங்கள் நல்ல சர்தர்ப்பத்தை நழுவ விடாதீர்கள். இவ்வாறு அந்த தந்தியில் கூறப் பட்டு இருக்கிறது.

## சீன ஆக்ரமிப்பு எதிர்ப்புக் கமிட்டி

நயவஞ்சகச் சீனர்கள் திடீரென்று நம்பாரத தேசத்தின் மீது படையெடுத்து நம்மைப் பெரும் சோதனைக்குள்ளாக்கியிருப்பதைப் பற்றி காரைக்குடி யில் தமிழ்நாடு காங்கிரஸ் அரசியல் தியாகிகள் சங்கத் தின் சார்பில் முன் முயற்சி எடுத்துக் கொள்ளப்பட் டது. 24—10—62-ந் தேதி காங்கிரஸ் மாளிகையில்

சீன ஆக்கிரமிப்புக்கு எதிராக மக்களைத் திரட்டுவதற்கு ஆலோசனைக்கூட்டம் தமிழ்நாடு காங்கிரஸ் அரசியல் தியாகிகள் சங்கத்தின் சார்பில் நடைபெற்றது. கூட் டத்திற்கு நகரசபைத்தலைவர் திரு. மு. மு. அருணாசலம் செட்டியார் தலைமை வகித்தார். கூட்டத்தின் நோக் கத்தைப் பற்றியும், சீனர்களின் திடீர் படையெடுப்பு எவ்வளவு துரோகமானது, பயங்கரமானது என்பது பற்றியும் திரு. K. கன்னையா விளக்கிப் பேசினார். மற் றும் பலரும் பேசினார்கள். பின்னர் சீன ஆக்கிரமிப்பு எதிர்ப்புக் கமிட்டி அமைக்கப்பட்டது. கமிட்டிக்கு திரு. அரு. மு. மு. அருணாசலம் செட்டியார் (சேர்மன்) தலைவர், திரு. P. சுப்பையா அம்பலம், உபதலைவர் திரு. K. கன்னையா, காரியதரிசி. திரு. P. உன்னிகிருஷ் ணன், உபகாரியதரிசி மற்றும் 30 கமிட்டி மெம்பர் களும் தேர்ந்தெடுக்கப்பட்டனர். இந்தக் கமிட்டி யினர் சீன ஆக்கிரமிப்புக்கு எதிராக மக்களின் ஒன்று பட்ட ஆதரவைத் திரட்டுவதற்குப் பல பிரம் மாண்டமான ஊர்வலங்களையும், பொதுக்கூட்டங் களையும் அடிக்கடி நடத்தினர். அரசாங்கத்துக்கு மக்க ளின் ஒத்துழைப்பைக் காட்டுவதற்கு இந்தக் கமிட்டி யினர் சார்பில் 1 லட்ச ரூபாய்க்கு மேல் நிதி திரட்டி இந்திய அரசாங்கத்துக்கு அனுப்பப்பட்டது. இந்தக் கமிட்டியில் சர்வகட்சியினரும் சேர்ந்து அயராது பாடு பட்டனர்.

## அரசாங்க இயந்திரத்தில் தேசத் துரோகக் கும்பல்கள்

(10—10—62 தினச் செய்தி) அந்நியன் நம்மை அடக்கி ஆள அவனுக்கு சாதகமாக தேசத்தை நயம்,

தேச மக்களையும் காட்டிக் கொடுக்கும் கும்பலாகப் பார்த்து எடுத்து அமைக்கப்பட்டிருந்தது அரசாங்க இயந்திரம். தேசம் அந்நியனிடமிருந்து விடுதலை அடைந்த பிறகும் நிர்வாக அமைப்பு மாற்றப்படாமல் நடந்து வருவதின் காரணமாக தேசத்துக்கும், தேச மக்களுக்கும் எவ்வளவு இடையூறுகளும்' கஷ்டங்களும் ஏற்படுகின்றன என்பதை நாம் அனுபவித்து வருகிறோம். இப்போது தேசத்தைத் துண்டாட வேண்டுமென்று கிளம்பியுள்ள நாசகாரக் கூட்டம் பொது மக்களிடம் தவறான எண்ணங்களை உண்டாக்கி அதைத் தங்கள் நோக்கத்துக்கு பயன்படுத்துகின்றதோடு அரசாங்கத் துறைகளிலே பணி புரியும் பலரை தங்கள் கையாட்களாக வைத்துக் கொண்டு சதிவேலை செய்து வருகின்றனர். கொஞ்சம் கூட பயமின்றி அரசாங்கத்துக்கு விரோதமாக வேலை செய்கின்றனர். திட்டங்களை எதிர்த்துப் பேசுகின்றனர். தி. மு. க. விற்கு நிதி திரட்டுகின்றனர், கட்சி வேலை செய்கின்றனர். இது பற்றி முன்னுடியே மந்திரிகள் கவனத்துக்குக் கொண்டுவந்த போது அவர்கள் அலட்சியமாக நினைத்தார்கள். இப்போது பயங்கர ரூபத்தில் அந்த தீய சக்திகளின் வேலைகள் வெளிப்படுகின்றன. இனியும் கடுமையான நடவடிக்கை எடுக்கத் தயங்குவது ஏன்? அதிகாரிகளின் தவறுகளை மறைக்க அதிகாரிகளே உடந்தையாக இருக்கிறுர்கள் என்ற தயக்கமா? இதைப்பற்றி ராஷ்டிரபதி ராதாகிருஷ்ணன் அவர்களே சொல்லியுள்ளார்கள். அப்படியானுல் சட்டத்தையே மாற்றியமையுங்கள். தேசத் துரோகிகளைக் கண்டுபிடிக்க அதிகாரிகள் உதவுவார்களா? என்ற சந்தேகமா?

அந்தப் பொறுப்பை தேச விடுதலை வீரர்களான தேச பக்தர்களிடம் ஒப்படையுங்கள்! இனியும் தாமதம் வேண்டாம் என்று கேட்டுக் கொள்கிறேன்.

**கே. கன்னையா**
**செயலாளர்**
3—10—62

த. நா. காங்கிரஸ் அரசியல்
தியாகிகள் சங்கம்.
காரைக்குடி
11—4—1962

கனம் திரு. சி. சுப்பிரமணியம் அவர்கள்
எஃகு கனரகத் தொழில் அமைச்சர்
இந்திய அரசாங்கம்
**நியூடில்லி.**

**அன்புடையீர், வணக்கம்!**

தாங்கள் இந்திய அரசாங்க அமைச்சரவையில் அமைச்சராக பதவி ஏற்றுக் கொண்டமைக்கு எங்கள் சங்கத்தின் சார்பில் மகிழ்ச்சியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

தமிழகத்தில் புகழ்சான்ற அரசியல் அறிஞர்கள், ஆட்சித் தலைவர்களுள் ஒருவரான தங்களுக்கு மத்திய அரசின் ஆட்சிப் பொறுப்பில் இடம் கிடைத்ததில் வியப்பொன்றும் இல்லை.

இந்தியாவின் எதிர்காலமும், நாம் கனவு காணு கின்ற ஓர் புதிய சமுதாய அமைப்பும், இந்தியாவில் கனரகத் தொழில்களின் வளர்ச்சியைப் பொறுத்துத்

தான் உள்ளது. அந்தத் துறையை தங்களிடம் ஒப்படைத்திருப்பது சிறப்பானதும் பொருத்தமானது மாகும். இந்தியாவிலேயே தமிழக மாநில ஆட்சிமுறை சீரும் சிறப்பும் உள்ளதாகவும் ஏனைய மாநிலங்களுக்கு உதாரணமாகவும் விளங்கியதற்குக் காரணம் தமிழகத்தில் உள்ள சிந்தனை உள்ளம் படைத்த மக்கள் அனைவரும் அறிந்துள்ளார்கள்.

தமிழர் இனமும், தமிழ் மொழியும் சுதந்திரம் அடைந்தபின் வேகமாக வளர்ந்து தனக்குரிய இடத்தை அடைந்துள்ளதற்குக் காரணம் தங்களது சீரிய சேவைதான். அன்று சொன்னீர்கள் நான் டில்லிக்குச் சென்றாலும் தமிழனாகவே இருப்பேன் என்று. அதில் சந்தேகமில்லை.

மீண்டும் தமிழ் நாடு அரசியல் தியாகிகள் சங்கத்தின் சார்பில் மகிழ்ச்சியையும் பாராட்டுதலையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

தங்களன்புள்ள
**கே. கன்னையா,** செயலாளர்.
தமிழ் நாடு காங்கிரஸ் அரசியல்
தியாகிகள் சங்கம்.

**New Delhi**
**27th April, 1962.**

**C. Subramaniam**
**Minister of steel & Hevy Industries.**

**To**

**Tamilnad Congress Political**
**Supperers Association, Karaikudi.**

Dear.

Members of Tamilnad Congress Political Sufferers Association

I thank you very much for your kind message of congrajulations on my oppoinment as minister of Steel and Heavy Industries in the union cabinet.

With my kind regard.

Yours sincerely.
C. Subramaniam.

## பாக்கிஸ்தான் யுத்தம், தமிழ்நாடு அரசியல் தியாகிகள் சங்கம் கன்னியா வேண்டுகோள்

(14—9—65 தமிழ்ச் செய்தி) காரைக்குடி செப். 14. தேசபக்தர்களே, சுதந்திரப் போராட்ட வீரர்களான அரசியல் தியாகிகளே, நாம் அரும்பெரும் தியாகங்கள் செய்து அடைந்த சுதந்திரத்திற்கு, சுதந்திரம் அடைந்தபின் இரண்டாம் முறையாக பெரும் சோதனை ஏற்பட்டிருக்கிறது. கடந்த 18 ஆண்டுகளாக நம் பாரதத்துக்குப் பெரும் தொல்லையும் நஷ்டமும் ஏற்படுத்தி வந்த பாக்கிஸ்தான் இப்போது நம்மீது பெரும்யுத்தம் தொடுத்துள்ளது. வெறிபிடித்த பாக்கிஸ்தான் அரக்கர்களை எதிர்த்து நம் பாரதப்படைவீரர்கள் வெற்றிமுரசு கொட்டுகிறுர்கள். அவர்களுக்கு ஆக்கமும், ஊக்கமும் அளித்து மேலும் உற்சாகத்தை ஊட்ட உள்நாட்டில் எல்லைப்பகுதி மக்களின் ஆதரவையும், ஒத்துழைப்பையும் திரட்டும் வேலையில் தீவிரமாக இறங்க வேண்டும்.

அடிமைப்புத்தி உள்ளவர்களும், தன்னம்பிக்கை இல்லாதவர்களும், தேசத்துரோகிகளும் இந்தச் சமயத்தில் பொய் வதந்திகளைக் கிளப்பிவிட்டு குழப்பத்தை, பீதியை உண்டாக்குபவர்களையும் எதிர்த்து தயவுதாட்சண்யமின்றி நடவடிக்கை எடுங்கள். இதற்காக கமிட்டிகளை அமையுங்கள். கமிட்டியில் சேர்ந்து செயலாற்றுங்கள் என்று கேட்டுக் கொள்கிறேன்.

## ஆந்திரம் பாஞ்சாலத்தைப் போல் தமிழகத்திலும் பென்ஷன் தரவும் ஆட்சியாளருக்கு அரசியல் தியாகிகள் வேண்டுகோள்

(*18—2—64* சுதேசமித்திரன்) காரைக்குடி பிப். *10*. தமிழ்நாடு காங்கிரஸ் அரசிய தியாகிகள் சங்க சிறப்புக் கூட்டம் நேற்று இந்நகர் சொக்கலிங்கம் சுகாதார நிலயத்தில் திருவாடனை முன்னால் எம். எல். ஏ. ஸ்ரீ. பொ. செல்லத்துரை தலைமையில் நடைபெற்றது. சங்கம் ஆரம்பித்து இதுவரை செய்துள்ள வேலைகள் குறித்து செயலாளர் ஸ்ரீ. கே. கன்னையா அறிக்கை சமர்ப்பித்தார். கூட்டத்தில் தமிழ்நாடு உள்துறை அமைச்சர் ஸ்ரீ பி. கக்கன் கலந்து கொண்டு பேசுகையில் அரசியல் தியாகிகளின் கஷ்டங்கள் தமக்கு தெரியுமென்றும், தியாகிகள் நிலை உயர தம்மாலான உதவிகளைச் செய்ய முயற்சி செய்வதாகவும் கூறினார். கூட்டத்தில் கீழ்க்கண்ட தீர்மானங்கள் ஏகமனதாக நிறைவேறின: அகில இந்திய காங்கிரஸ் கமிட்டித் தலைவராக ஸ்ரீ கே. காமராஜ் தேர்ந்

தெடுக்கப்பட்டிருப்பது குறித்து சங்கம் மகிழ்ச்சி அடைகிறது. சுதந்திரப் போராட்டத்தில் சிறைசென்ற அரசியல் தியாகிகளை காங்கிரஸ் ஸ்தாபனத்தின் நிரந்தர, தீவிர அங்கத்தினர்களாகவும், தேர்தலில் கலந்து கொண்டு போட்டியிட தகுதி வாய்ந்தவர்களாகவும் ஏற்றுக் கொண்டு அதற்கான விதிகளைச் சேர்க்குமாறு அ. இ. கா. கமிட்டியையும், த. நா. கா. கமிட்டியையும் சங்கம் கேட்டுக் கொள்கிறது. விடுதலைப் போராட்ட வரலாறு குறித்தும், அரசியல் தியாகிகளின் வரலாறு குறித்தும் மாவட்ட வாரியாகத் தயாரித்து அவ்வரலாற்றை ஆரம்பப்பள்ளி முதல் கல்லூரி வரை துணைப் பாடப்புத்தகமாக வைக்குமாறு சர்க்காரை சங்கம் கேட்டுக் கொள்கிறது. தகுதியும், திறமையும் உள்ள அரசியல தியாகிகளை அவர்கள் தகுதி திறமைக்கு ஏற்ப வயது வரம்பின்றி சர்க்கார் நியமனங்களில் சேர்த்துக் கொள்ள வேண்டுமென்று அரசாங்க ஆணை இருந்தும் அதைத் தக்கவாறு அமுல் நடத்தாமல் இருப்பது குறித்து சங்கம் வருநதுகிறது. தேசியத்துக்கு விரோதமான தீயசக்திகள் பொதுமக்களிடையேயும் இளைஞர் பிஞ்சு உள்ளங்களிலும் நச்சு மனப்பான்மையை புகுத்துவதுடன் சர்க்கார் இயந்திரத்திலும ஆபத்து விளைவிப்பதைத் தடுக்க அரசாங்கம் "கடுமையான நடவடிக்கை எடுககுமாறு சங்கம் கேட்டுக் கொள்கிறது. குடியிருக்க வீடு இல்லாத அரசியல தியாகிகளுக்கு வீடு கட்டித்தர வேண்டுமென்று மத்திய, மாநில அரசுகளை சங்கம் கேட்டுக் கொள்கிறது. ராணுவ வீரர்களின் குழந்தைகளுக்கு ஸ்காலர்ஷிப் வசதி போல் ஆண்டுதோறும நிரந்தரமாக, நேரடியாகக் கிடைகக வகைசெய்யு

மாறு அரசாங்கத்தை சங்கம் கேட்டுக் கொள்கிறது. தஞ்சை ஜில்லாவில் நில உச்சவரம்பு சட்டத்தின் கீழ் கிடைக்கும் சுமார் 12 ஆயிரம் உபரி நிலத்திலிருந்து நிலமற்ற அரசியல் தியாகிகளுக்கு மான்யமாக வழங்குமாறு சர்க்காரை சங்கம் கேட்டுக் கொள்கிறது. தமிழ்நாடு காங்கிரஸ் அரசியல் தியாகிகள் சங்கத்தின் சார்பில் கூட்டுறவு முறையில் பஸ் டிரான்ஸ்போர்ட் நடத்த வேண்டிய நடவடிக்கைகளை எடுக்குமாறு சங்க காரியதரிசிக்கு அதிகாரம் கொடுக்கிறது. ஆந்திரா, பஞ்சாப் மாநிலங்கள் போன்று தமிழ்நாடு அரசாங்கமும் அரசியல் தியாகிகளுக்கு மாதந்தோறும் பென்ஷன் வழங்குமாறு சங்கம் கேட்டுக் கொள்கிறது. பஞ்சாயத்து யூனியன்களில் சமூகநல ஊழியர்களாகப் பணியாற்றும் அரசியல் தியாகிகளை, தேசீய விரோதமான தீயசக்திகளை சமாளிக்க நல்ல முறையில் பயன்படுத்திக் கொள்ள வேண்டுமென்றும் சங்கம் கேட்டுக் கொள்கிறது.

**தற்போதைய சூழ்நிலையில் அஹிம்சையை கடைப்பிடிக்க வேண்டிய அவசியமில்லை.**

**• பிரதமர் சாஸ்திரி அறிவிப்பு**

(11—5—1965 தினமணி) புதுடில்லி, மே. 9. பலாத்காரத்தைக் கொண்டே சமாளிக்க வேண்டும். கட்ச் ரன் பகுதியில் பாக்கிஸ்தான் ஆக்கிரமிப்பினால் ஏற்பட்டுள்ள தற்போதைய நிலைமையில் சர்க்கார் அஹிம்சையைக் கடைப்பிடிக்க வேண்டிய அவசியமில்லை'' என இந்திய பிரதமர் ஸ்ரீ லால்பகதூர் சாஸ்திரி இங்கு இன்றிரவு கூறினார். பிரிட்டிஷ் யோசனைகளை

யொட்டி கட்ச் சிந்து எல்லையைக் குறிப்பது பற்றி விவாதிக்கலாம். ஆனால் பிரிட்டிஷ் யோசனைகள் பற்றி பாக்கிஸ்தானின் பதிலுக்கு நீண்ட நாட்கள் இந்தியா காத்திருக்க முடியாது. போரை தவிர்க்க முடியுமானால் நாம் நிச்சயம் அதை செய்வோம். இது பிரிட்டிஷ் யோசனைகளை பாக்கிஸ்தான் ஏற்கிறதா அல்லது இல்லையா என்பதைப் பொறுத்ததாகும் என்றார். பாரதிய சங்கரம் சமிதி சார்பில் நடத்தப்பட்ட விடுதலைப் போராட்ட வீரர்கள் மகாநாட்டில் பிரதமர் பேசினார். நாட்டில் ஐக்கியமும், பல்வேறு வகுப்புக்களிடையே சுமூக உறவும், அவசியம் என பிரதமர் வலியுறுத்தினார். நாட்டில் ஒற்றுமையும் பல்வேறு வகுப்புக்களிடையே சுமூக உறவும் இல்லாவிட்டால் எந்த ஆக்ரமிப்பாளரையும் நாம் எதிர்த்து முறியடிக்க முடியாது என்றும் அவர் சொன்னார். இந்தியாவின் பொருளாதார முன்னேற்றத்தைக்கண்டு சீனா, பாக்கிஸ்தான் உள்பட சில நாடுகள் பொருமை கொண்டுள்ளன. ஜனநாயக சோஷலிஸ பாதையில் இந்தியாவின் முன்னேற்றத்தை சீர்குலைக்க பாக்கிஸ்தானும், சீனாவும் கூட்டுச் சேர்ந்துள்ளன என்றார். விடுதலைப் போராட்ட வீரர்கள் பற்றிக் குறிப்பிட்டு விடுதலைப் போராட்ட வீரர்கள் பற்றிய விவரங்கள் அடங்கிய ஜாபிதா ஒன்றை தயாரிக்கலாம் என பிரதமர் யோசனை கூறினார். இது அங்கஹீனமாகவுள்ள, அவதிப்படும் விடுதலைப் போராட்ட வீரர்களுக்கு ராஜ்ய, மத்திய சர்க்கார்கள் தங்களாலான உதவியைச் செய்ய வசதியளிக்கும் என்றார். சர்க்கார் வைபவங்களில் விடுதலைப் போராட்ட வீரர்களை மரியாதையுடன் நடத்த வேண்டும். தனது சொந்த வீரர்களை நன்கு நடத்தாத ஒரு நாட்டை பிறநாடுகள்

மதிக்காது என்றும் பிரதமர் கூறினார். சர்க்கார் வைபவங்களில் விடுதலைப் போராட்ட வீரர்களுக்கு உரிய இடம் அளிப்பதற்கு சர்க்கார் சம்பிரதாயங்களும், உத்தியோக தோரணையும் தடையாக உள்ளன என்பதையும் அவர் ஒப்புக் கொண்டார்.

தீர்மானங்கள்:— பொதுவாழ்வில் தார்மீக பண்புகள் மங்கி வருவது குறித்து கவலை தெரிவித்து மகாநாட்டில் ஒரு தீர்மானம் ஏகமனதாக நிறைவேற்றப்பட்டது. பொதுப்பணி, வர்த்தகம் மற்றும் வாழ்க்கையின் இதர துறைகளிலும் நேர்மை, நாணயம், ஒழுக்கம், தார்மீகப் பண்புகள் வரை தேசத்தலைவர்கள் செய்துவரும் முயற்சிகளை மகாநாடு ஆதரித்தது. சீரற்ற போக்கு, முறைகேடான செயல் இவைகளுக்கு எதிராகப் பொதுமக்களின் அபிப்பிராயத்தை திரட்டுமாறு மகாநாடு கேட்டுக் கொண்டது. தற்போது நிலவி வரும் பதவி மோகம், பண ஆசை மறைந்து விடுதலைப் போராட்டத்தின் போது இருந்த தன்னலமற்ற சேவா உணர்ச்சி, தேசபக்தி, கடமை உணர்ச்சி ஆகியவை ஏற்படும் என மகாநாடு நம்பிக்கை தெரிவித்தது. ஏராளமான ஸ்திரீகள் உள்பட விடுதலைப் போராட்டத்தில் கலந்து கொண்ட ஆயிரத்துக்கு மேற்பட்ட தியாகிகள் மகாநாட்டில் கலந்து கொண்டனர். நாட்டின் பந்தோபஸ்து, பிரதேச ஐக்கியம், கௌரவம் இவற்றைப் பாதுகாக்க சர்க்கார் எடுக்கும் சகல நடவடிக்கைகளுக்கும் பூரண ஆதரவளிக்க பிரதிக்ஞை எடுத்துக்கொண்டனர். பாக்கிஸ்தான், சீன ஆக்ரமிப்புக்களை எதிர்த்து நாட்டை பாதுகாப்பதில் எந்தவிதமான கஷ்டத்துக்கும் தியாகத்துக்கும் தாங்கள் தயார்

என்றும் இந்த வீரர்கள் தெரிவித்தனர். ஏராளமான தியாகிகள் வறுமையில் வாடுவதாகவும் அவர்கள் பால் சர்க்காருக்குள்ள கடமையை நினைவூட்டுவதாக வும் மற்ருெரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

மகாநாட்டுக்குத் தலைமை வகித்த யூனியன் குடியமைப்பு மந்திரி ஸ்ரீ மகாவீர் தியாகி, காங்கிரஸ் கொடியை எதிர்த்து தெரிவிக்கப்பட்ட ஆட்சேபத்தை நிராகரித்தார். இந்தக் கொடியின் கீழ்தானே அன்று நாடு, சுதந்திரத்துக்கு போராடியது என்ருர்.

## தியாகிகள் உதவித் தொகைத் திட்டம் உற்சாகம் அளிப்பதாக இல்லை.

*(24—8—1966. தமிழ்நாடு)* காரைக்குடி ஆக. 28. வாழ்க்கை வசதியற்ற அரசியல் தியாகிகளுக்கு மாதந் தோறும் உதவித்தொகை அளிப்பது பற்றித் தமிழக முதலமைச்சர் திரு. எம். பக்வத்சலம் அண்மையில் விடுத்துள்ள அறிக்கையானது உற்சாக மூட்டுவதாக இல்லை. மேலும் இத்திட்டம் தியாகிகளுக்குக் கெளரவம் அளிக்கக் கூடியதாகவும் காணப்படவில்லை" எனத் தமிழ்நாடு காங்கிரஸ் அரசியல் தியாகிகள் சங்கச் செயலாளர் திரு. கே. கன்னையா இங்கு தெரிவித்தார். அவர் மேலும் அறிவிப்பதாவது;— அரசியல் தியாகிகளுக்கு நல்ல முறையில் கெளரவமும் நிரந்தரமான பலனும் தரத் தக்க உதவி கிடைக்க வேண்டுமெனப் பல ஆண்டு காலமாகவே அரசினரை வற்புறுத்தி வருகின்ருேம். அரசியல் தியாகிகளுக்கு உதவித் தொகை அளிக்கும் திட்டம் சிறிது காலமாக அரசினரின் ஆய்வதில்

இருந்து வருவதாகச் செய்திகள் வெளிவந்தன. இறுதியாக இத்திட்டத்தை அமைச்சரவை ஒப்புக்கொண்டுள்ளதாகவும், வாழ்க்கையில் ஆதரவற்ற நிலையில் உள்ள தியாகிகளுக்கு உதவித்தொகை அளிக்கப்படும் திட்டம் வரும் அக்டோபர் மாதம் தொடக்கத்திலிருந்து அமுலுக்கு வரும் எனவும் முதலமைச்சர் எம். பக்தவத்சலம் அண்மையில் தெரிவித்துள்ளார். சிறை சென்ற அரசியல் தியாகிகள் அனைவருக்கும் வேறுபாடின்றி மாதமொன்றுக்கு ரூபாய் 150க்குக் குறையாது உதவித்தொகை வழங்கப்பட வேண்டும். செல்வந்தராக உள்ள தியாகிகள் இந்த உதவித்தொகையைப் பெற விரும்பமாட்டார்கள். உதவித்தொகை பெறக்கூடிய நிலையில் இன்று உயிருடன் உள்ள சிறை சென்ற அரசியல் தியாகிகள் தமிழகத்தில் சுமார் 5,000 பேர்களுக்குமேல் இருக்க மாட்டார்கள். ஆகவே அரசியல் தியாகிகளுக்கு தொல்லை ஏற்படாத அளவில் அவர்களின் வாழ்க்கைக்குப் பயன் தரத்தக்க கௌரவமான முறையில் வேறுபாடின்றி உதவித் தொகை வழங்கப்பட வேண்டும். இது சட்டமாகவே நிறைவேற்றப்பட வேண்டும் என தமிழக முதலமைச்சரையும் அரசினரையும் கேட்டுக் கொள்கிறேன்.

## சங்க சிறப்புக் கூட்டம்

தமிழ்நாடு காங்கிரஸ் அரசியல் தியாகிகள் சங்க சிறப்புக் கூட்டம் 26—11—67 ஞாயிற்றுக்கிழமை காலை 10-30 மணிக்கு காரைக்குடி S. M. S. உயர்நிலைப்பள்ளி கட்டிடத்தில் நடைபெற்றது. கூட்டத்திற்கு தமிழ்நாட்டின் பல ஜில்லாக்களிலிருந்து தியாகிகள்

வந்திருந்தனர். கடலூர் திரு. **W. V.** சுதர்சனம் நாயுடு **Ex. M. L. C.** தலைமை வகித்தார். வெளி ஜில்லாக்களி லிருந்து பலர் அனுப்பியிருந்த ஒத்துழைப்புக் கடிதங் கள் கூட்டத்தில் படிக்கப்பட்டபின் சங்கச் செயலாளர் **K.** கன்னையா இதுவரை சங்கம் செய்துள்ள வேலை களை விளக்கிப் பேசி எல்லோரையும் வரவேற்றார். தீர்மானங்களின் மீது திருவாடனை பொ. செல்லத் துரை, திண்டுக்கல் R. S. மணி பாரதி, மதுரை குரு நாதபிள்ளை ஆகியோர் பேசினார்கள். பின்னர் அடியிற் கண்ட தீர்மானங்கள் நிறைவேறியது. *1.* தேசம் சுதந் திரம் அடைந்த பின்னால் தேசத்தின் ஆட்சிப் பொறுப் பில் இருந்தவர்கள், சுதந்திரப் போராட்ட வீரர்களின் ஈடு இணையற்ற தியாக வரலாற்றை மக்களிடையே பரப்பி சுதந்திரப் போராட்ட வீரர்களைப் போற்றிப் பாராட்டி கௌரவிக்கத் தவறியதோடு தேசபக்திக்கு விரோதமான சக்திகள் தேசபக்தர்களை எள்ளி நகை யாடும் நிலையை உண்டாக்கிவிட்டனர். இதன் காரண மாக சுதந்திரத்துக்குப் பின் தோன்றிய இந்த நாட்டின் சந்ததிகளுக்கு உலகிலேயே ஈடு இணையற்ற சுதந்திரப் போராட்ட வரலாற்றைப் பற்றியோ, தேசத்திற்காக சர்வபரித்தியாகம் செய்த வீரத்தியாகிகளைப் பற்றியோ தெரிந்து கொள்ளவாய்ப்பில்லை; அதனால் தேசவிரோத தீயசக்திகள் பிஞ்சு உள்ளங்களிலே நஞ்சை ஊட்டி வளர்த்தார்கள். இதன் காரணமாக இன்றைக்கு தேச பக்தி என்பது கேளிக் கூத்தாகிவிட்டது. கடந்த பல வருடங்களாக பல கட்டங்களில் இந்தச் சங்கம் ஆட்சிப் பொறுப்பில் இருந்தவர்களுக்கு இந்த நிலையை எடுத்துக் காட்டியது. தேசபக்தி சீர்குலைக்கப்படுவதை யும், தேசபக்தர்கள் அலட்சியப்படுத்தி அவமானத்துக்

குள்ளாவதையும் எடுத்துக் கூறியது. ஆனால் சக தேச பக்தர்கள் எடுத்துச் சொல்வதை ஆட்சிப் பொறுப்பில் இருந்தவர்கள் அலட்சியப்படுத்தி விட்டார்கள்; இனியாவது தவறுகளைப் புரிந்துகொண்டு செயல்பட வேண்டுமென்று காங்கிரஸை கூட்டம் கேட்டுக் கொள்கிறது. 2. அரசியல் தியாகிகளுக்குப் பென்ஷன் வழங்குவதை காலதாமதம் செய்யாமல் ஏற்பாடு செய்வதோடு வருமான வரம்பு பற்றி விசாரணையில் சில தவறான தகவல்களை வைத்து பரம ஏழைகளுக்கும் பென்ஷன் கிடைக்காமல் போகிறது. இதைத் தவிர்க்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறது. 3. கூட்ட ஆரம்பத்தில் சமீபத்தில் காலமான தேவகோட்டை தியாகி திருநாவுக்கரசு செட்டியார் ஆகியோர்களுக்கு அனுதாபத் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. காரிய தரிசி நன்றி கூறினார்.

## சுதந்திரப் போராட்ட வீரர்களுக்கு உதவும் திட்டம் இல்லை!

(15—12—1967 நவசக்தி செய்தி)

காரைக்குடி டிச. 14. தேச சுதந்திரப் போராட்ட வீரர்களுக்கு ரொக்கமான்யமாகவோ அல்லது கடன் தொகை ரூ. 10,000-க்கு குறையாமல் கொடுத்து கஷ்டப்படுவோருக்கு உதவி செய்ய வேண்டுமென்று தமிழ்நாடு காங்கிரஸ் தியாகிகள் சங்கச் செயலாளர் கே. கன்னையா பிரதமர் இந்திரா காந்திக்கு எழுதி இருந்தார். அதனை தமிழக அரசு கவனத்திற்கு பிரதமர் அனுப்பியிருந்தார். தமிழக அரசு தமிழ்நாடு காங்கிரஸ் அரசியல் தியாகிகள் சங்கச்

செயலாளருக்கு அனுப்பிய பதிலில் சுதந்திரப் போராட்ட வீரர்களுக்கு ரொக்கமான்ய உதவியோ, அல்லது கடன் கொடுத்து உதவுவதற்கோ தமிழக அரசிடம் திட்டம் எதுவும் இல்லை என்று தெரிவித்துள்ளது. இதனால் சுதந்திரப் போராட்ட வீரர்கள் மிகவும் வேதனையடைந்துள்ளனர்.

## தேசியக் கொடி அவமரியாதை மரண தண்டனை வழங்க வேண்டும் பிரதமர் இந்திரா காந்திக்கு அரசியல் தியாகிகள் சங்கச் செயலாளர் கடிதம்

*(26—2—68 தினமலர் செய்தி)* காரைக்குடி பிப். 25. இந்தி எதிர்ப்பின் பேரால் தேசியக் கொடிக்கு தீவைத்துக் கொளுத்தப் போகிறோம் என்று முன்னறிவிப்புச் செய்துவிட்டு, பொதுக்கூட்ட மத்தியில் தேசியக் கொடிக்குத் தீவைத்துக் கொளுத்தியிருக்கின்றனர். இதுபோன்ற துரோகச் செயல்கள் இங்கு பல நடைபெறுகின்றன!" என்று தமிழ்நாடு காங்கிரஸ் அரசியல் தியாகிகள் சங்கச் செயலாளர் கே. கன்னையா பிரதமர் இந்திரா காந்திக்கு எழுதியுள்ள கடிதத்தில் குறிப்பிட்டுள்ளார் எனத் தெரிகிறது. "தேசியக் கொடியை தீவைத்துக் கொளுத்தப் போகிறார்கள் என்று முன் கூட்டியே தெரிந்திருந்தும் எந்த அதிகாரியும் இந்தத் தேசத்துரோகச் செயலைத் தடுக்க முயற்சிக்கவில்லை, போலீஸையும் அங்கு காணோம்" என்று கோயமுத்தூர் போன்ற இடங்களில் தேசியக் கொடிக்கு தீவைப்புச் சம்பவங்கள் குறித்து அவர் குறிப்பாகச் சுட்டிக் காட்டியுள்ளார்.

ஆட்சி எதற்கு?:— மேலும் அவர் தமது கடிதத்தில் குறிப்பிட்டுள்ளதாவது:— கடந்த மாதம் சென்னைக் கோட்டையில் பறந்து கொண்டிருந்த தேசியக் கொடியை பட்டப்பகலிலேயே ஒருவன் கீழே இறக்கி கிழித்தெறிந்திருக்கிறுன். தேசத்தின் சுதந்திரச் சின்னம் தேசியக் கொடி, தேசியத்தின் தன்மானம் தேசியக் கொடி, புனிதமான இந்நாட்டின் கொடியை இழிவு படுத்தி தீவைப்பது நாசப்படுத்துவது போன்ற நிகழ்ச்சிகளைத் தடுக்கப்படாவிட்டால் இந்நாட்டில் ஆட்சி அதிகாரம் எதற்கு? இந்த அவலநிலை ஏற்படுவதற்காகவா லட்சோப லட்ச வீரர்கள் சுதந்திரத்திற்காகத் தங்கள் வாழ்நாட்களை அர்ப்பணித்தார்கள்? பகவத்சிங், ராஜகுரு, சுகதேவ் போன்ற புரட்சி வீரர்கள் தூக்குமேடை ஏறியது எதற்காக? திருப்பூர் குமரன் உயிர்ப்பலியானது எதற்காக?

மரண தண்டனை:— தேசத்துரோகச் செயலைக் கடுமையாக ஒழிக்கப்பட வேண்டும். தேசியக் கொடியை அவமதிப்பவர்களுக்கும், நாசப்படுத்துகிறவர்களுக்கும் மரண தண்டனை கொடுக்க வேண்டும். என்று அவர் தமது கடிதத்தில் குறிப்பிட்டுள்ளார்.

---

